


# தமிழ் மரபில் மரணச் சடங்குகள்

தொகுப்பு: திருமதி இரத்தினதேவி மதியாபரணம்

உ
சிவமயம்



வக்ர துண்ட மஹா காய
சூர்ய கோடி ஸமப் ப்ரபா
நிர்விக்னம் குரு மே தேவ
ஸர்வ கார்யேசு ஸர்வதா.

**(வளைந்த துதிக்கையையும் பெரிய உடலையும் கோடி சூரியர்களுக்கு இணையான ஒளியையும் உடைய தேவனே! எனக்கு எப்போதும் எல்லாக் காரியங்களிலும் இடையூறு இல்லாமல் செய்வாயாக!)**

ஓம் பூர் புவ ஸ்வா:
தத் ஸவிதுர் வரேண்யம்
பர்கோ தேவஸ்ய தீமஹீ
த்தியோ யோந ப்ரசோதயாத்

**(ஓ மாதா முக்காலம் மூவுலகம் முக்குணம் ஆகியவற்றில் உறைபவளே! எனது புத்தியை கூர்மை அடையச் செய்து சூர்ய பிரகாசம் இருளை அகற்றுவதுபோல் எனது சகல அறியாமைகளையும் அகற்றி என்புத்தியைச் சாந்த சித்த நிர்மலமானதாகப் பிரகாசிக்கச் செய்யும்படி யான் உன்னைத் துதிக்கின்றேன்)**

த்வமேவ மாதாச பிதா த்வமேவ
த்வமேவ பந்துஸ்ச ஸகா த்வமேவ
த்வமேவ வித்யா த்ரவிணம் தவ்மேவ
த்வமேவ ஸர்வம் மம தேவ தேவா.

**(ஓ பகவானே! நீரே எமக்குத் தாயும், தந்தையும், உற்றாரும், நண்பரும், கல்வியும், செல்வமும். நீரே எமக்கு சகலமும்! உமக்கு எனது அனந்தகோடி வணக்கங்கள்.)**

அஸதோமா ஸத்கமய
தமஸோமா ஜ்யே திர்கமய
ம்ருத்யோர்மா அம்ருதம்கமய
ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

**(பொய்மையிலிருந்து மெய்மைக்கும் இருளினின்று ஒளிக்கும் மரணத்திலிருந்து அறியாமைக்கும் என்னை வழி நடத்தி செல்வாயாக!)**

# பொருளடக்கம்

# சமர்ப்பணம்

கனடாவாழ் தமிழ் சைவ
மக்கள் தமது அந்திம காலத்தில்
நிம்மதியாகவும் சந்தோஷமாகவும்
Happy & Peace மரணிப்பதற்காக
பேராசிரியர் சந்திரகாந்தன் அவர்களின்
பெருமுயற்சியால் கனடா
வைத்தியசாலைகளில் ஒன்றான
Providence Health Care இல்
செயலாற்றுகின்ற Tamil Caregiver Project
அனுசரணையுடன் ஆரம்பிக்கப்பட்ட
சைவ தமிழ் ஆன்மீகப் பணியாளர்
Tamil Saiva Spiritual Support Workers
திட்டத்திற்கு அடியேனின்
இச்சிறு வெளியீடு
சமர்ப்பணம்

- திருமதி இரத்தினதேவி
மதியாபரணம்

# தொகுப்புரை

உலக வரலாற்றில் மிகவும் தொன்மை வாய்ந்த இந்து சமயத்தின் பண்பாட்டுக் கலாச்சாரங்கள் பல.

இன்றைய காலகட்டத்தில் பெரும்பாலான இந்துக்கள் புலம் பெயர்ந்து உலக நாடுகள் பலவற்றில் வாழ்கின்றனர். மாறுபட்ட சூழலில் வித்தியாசமான கலாச்சார பின்னணியில் வாழும் சமுதாயத்திற்கு உதவியாக **"தமிழ் மரபில் மரணச் சடங்குகள்"** என்னும் விடயம் பற்றிப் பலநூல்களில் இருந்து பெறப்பட்ட விடயங்களை ஒரு சாராம்சத் தொகுப்பாக வழங்கியுள்ளேன்.

தமிழர் பண்பாடுகள் மூட நம்பிக்கைகளின் அடிப்படையில் வந்தவைகள் அல்ல. எங்கள் வாழ்க்கையின் அடிப்படைக் கூறுகளை மற்றவர்களுக்கு உணர்த்தவே சடங்குகளும் சம்பிரதாயங்களும் ஏற்பட்டன. விஞ்ஞான வளர்ச்சியும் நாகரீக வளர்ச்சியும் எமது வாழ்க்கை முறைகளை மாற்றி அமைத்தமை தவிர்க்க முடியாதது. ஆயினும் வேத ஆகமங்களில் கூறப்பட்டவைகளை எமது வெளிநாட்டில் வாழுகின்ற தமிழ் மக்கள் அறியத் தருவதே எனது நோக்கமாகும். இவ்வகையில் இத் தொகுப்பு ஒரு ஆய்வுக் கட்டுரையாகும். எனவே இதில் குறை குற்றங்கள் இருப்பின் பொறுத்தருள வேண்டும் என்று வேண்டிக் கொள்ளுகின்றேன்.

தொகுப்பாசிரியர்
திருமதி இரத்தினதேவி மதியாபரணம்



# தமிழ் மரபில் மரணச் சடங்குகள்

பிறப்பு, இறப்பு இரண்டுமே ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் ஆகும். உலகில் பிறப்பவர்கள் அனைவருமே ஒருநாள் இறப்பது நிச்சயமான ஒன்று. ஆத்மா - உயிர் உருவாவதும் இல்லை; அழிவதும் இல்லை. உடம்பு மட்டுமே அழிகின்றது. இதனால்தான் ஒருவர் இறந்ததை உயிர் போய்விட்டது என்று கூறுகின்றார்கள் போலும். ஏனெனில் இந்த உயிரானது இந்த உடம்பைவிட்டுப் போய் இன்னொரு உடம்பை எடுக்கின்றது. இதையே எமது சமயகுரவர்களில் ஒருவரான மாணிக்கவாசகரும் திருவாசகத்தில் "புல்லாகிப் பூடாகிப் புழுவாய் மரமாகிப் பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக் கல்லாய், மனிதராய், பேயாய், கணங்களாய், வல்லசுரராகி முனிவராய்த் தேவராய் சொல்லாது நின்ற இத்தாவர சங்கமத்துள் எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்" என அழகாகக் கூறியுள்ளார். இப்பூவுலகில் ஒவ்வொருவரும் செய்கின்ற பாவ புண்ணியங்களுக்கமைய அவரவர்களுடைய பிறப்பு இறப்புகளும் அமைகின்றன.

அவரவர் செய்த கர்மவினைப் பயன்களுக்கு அமையவே இறப்புக்கள் மூப்பு, நோய், கொலை, தற்கொலை, அகால மரணம், மரண தண்டனை, வீரமரணம் என அமைகின்றன. இவைகளுக்குரிய சடங்கு முறைகளிலும் சில சில மாறுபாடுகள் இருக்கின்றன.

தமிழ் மரபில் வருகின்ற மக்களின் மரணச் சடங்குகளும் நாட்டுக்கு நாடு, காலத்திற்குக் காலம், இடத்திற்கு இடம், பணவசதி என மாறுபடுகின்றது. மனிதன் தனது வாழ்க்கை வசதிக்கேற்ப சுருக்கியும் விரித்தும் மரணச் சடங்குகளைச் செய்கின்றான்.

எமது மூதாதையர் காலத்தில் எமது தாய் நாட்டில் (இலங்கை) ஒரு வீட்டில் இறப்பு நடந்தால் ஒரு மாத காலத்திற்கு (31 நாட்கள்) இரவு பகலாக விளக்கு ஏற்றி இளநீர் வெட்டி வைத்து காலையும் மாலையும் அயலில் உள்ள உற்றார் உறவினர்கள் ஒன்றுகூடி ஒப்பாரி வைத்து அழுவார்கள். காலையும் மாலையும் மாறி மாறி மரண வீட்டிற்குப் போய் அழுவது ஒரு கடமையாக அவர்கள் செய்வார்கள். இது இறந்த 31 நாட்களும் இறந்தவருடைய ஆவி, தான் வசித்த இடத்தைச் சுற்றி அலைவதாயும் அந்த ஆவியைச் சாந்தப்படுத்தி அனுப்பவே இவை செய்யப்படுகின்றன என்பது ஐதீகம்! இதைவிட ஒரு மாதம் வரை எட்டுச் செலவை விட வீட்டில் சமையல் செய்ய மாட்டார்கள். ஒவ்வொருவராக முறைவைத்து சமைத்துக் கொடுப்பார்கள். அப்படி சாப்பாடு கொண்டு சென்று கொடுப்பவர்களும் துடக்கு உரிமை உள்ள மற்றவர்களும்

அவ்வீட்டிற்குச் சென்று சாப்பிடுவார்கள். இது அவர்களுடைய நெருக்கத்தையும் ஒற்றுமையையும் அடுத்தவர் துயரில் பங்கு கொள்ளுகின்ற பண்பாட்டையும் விளக்குகின்றது. ஆனால் இக்காலத்தில் காலத்திற்குக் காலம் நடக்கின்ற மாறுபாடுகள், வசதி இன்மைகள் காரணமாக இவைகள் சிறிது சிறிதாகக் குறைந்து போகின்றன.

அக்காலத்தில் ஒரு வீட்டில் மரணம் சம்பவித்தால் சடங்கு முடியும்வரை அயலில் உள்ள ஒருவருமே தமது வேலைகளுக்குச் செல்ல மாட்டார்கள். உணவு அருந்த மாட்டார்கள். அவ்வீட்டில் கூடியிருந்து ஆகவேண்டிய கருமங்கள் அனைத்தையும் செய்து உடலைத் தகனம் செய்த பின்பே வீடு கழுவி தலை முழுகி உறவு முறையில் உள்ளவர்கள் சமைத்துவரும் உணவையே எல்லோரும் ஒன்றுகூடி அருந்துவார்கள். பெண்கள் சுடலைக்கு செல்லும் மரபு எமது சமயத்தில் இல்லை. இதை கவிஞர் கண்ணதாசன்

"வீடுவரை உறவு, வீதிவரை மனைவி, காடுவரை பிள்ளை, கடைசிவரை யாரோ" எனப் பாடியுள்ளார். ஆண்கள் சுடலைக்குச் சென்றதும் பெண்கள் கூடி வீடு பெருக்கிக் கழுவி சுடலைக்குச் சென்ற ஆண்கள் வரும்வரை காத்திருந்து கட்டி அழுதபின்பே தலை முழுகச் செல்வார்கள்.

நம் நாட்டில் நம் முன்னோர் காலத்தில் ஒருவர் இறந்தவுடன் அவர் தலையை தெற்குப் பக்கமாக ஒரு மரவாங்கில் வெள்ளைத் துணி விரித்துக் கிடத்தி வாயையும் இரண்டு கை விரல்களையும் இரண்டு காலை விரல்களையும் கட்டி வயிற்றில் பொட்டலமாகக் கட்டிய உப்பை வைத்து வெள்ளை துணியால் உடலைமூடி விடுவார்கள். பின்னர் வாங்கின் அடியில் ஒரு பாத்திரத்தில் தண்ணீர் வைப்பார்கள். தலைமாட்டில் குத்துவிளக்கு, ஊதுபத்தி ஏற்றி கூடியிருந்து ஒப்பாரி வைத்து அழுவார்கள்.

# ஒப்பாரி

இறந்தவர்கள்மீது பாடப்படும் பாடல்களே "ஒப்பாரி" என்று அழைக்கப்படும்.*1 இறந்தவர்களின் இழப்பை எண்ணி இறந்தவர்களையும் தம்மையும் ஒப்பிட்டுப் பாடுவதும் ஒப்பாரியாகும். வாழ்வில் முன்னுரை தாலாட்டு. ஆனால் முடிவுவரை ஒப்பாரியாகும். தாலாட்டு கலங்கரை விளக்கமானால் ஒப்பாரி நினைவுச் சின்னமாகும். தாலாட்டும் ஒப்பாரியும் பெண்குலத்தின் படைப்பாகும். சென்னைப் பலக்கலைக் கழகத் தமிழ்

*1 நாட்டுப்புறப் பாடல்கள்

அகராதி ஒப்பாரியை ஒப்ப + ஆரி எனப் பிரித்து 'ஒப்புச் சொல்லி அழுதல்' எனப்பொருள் தருகிறது. ஒரு தமிழ் ஆங்கில அகராதியும் ஒப்பாரிக்கு 'ஒப்புச் சொல்லி அழுதல்' என்று பொருள் கூறுகிறது. அத்தோடு பெண்களால் பாடப்படுவது என்றும் இறந்தவர்க்கும் அடுத்த பிற பொருள்களுக்கும் ஒப்புச் சொல்லிப் பாடுவது என்றும் கூறுகிறது. தமிழில் ஒப்பாரியைப் பிலாக்கணம், பிணக்கானம், கையறு நிலை, புலம்பல், இரங்கற்பா, சாவுப்பாட்டு, இழவுப்பாட்டு, அழுகைப்பாட்டு எனப் பல்வகையாகக் கூறுவர். பாதுகாப்பை இழந்தாலும் பாதுகாக்கப்பட வேண்டியதை இழந்தாலும் பெண்களின் ஒப்பாரிகளில் சோகம் கொப்பளிக்கின்றது. கணவனுக்காகவும் பெற்றோர்களுக்காகவும் உடன் பிறந்தவர்களுக்காகவும் மாமன் மாமிக்காவும் இறந்த பொழுதில் பெண்கள் ஒப்பாரி பாடுகின்றனர். "தலைச்சன் பிள்ளை பெத்தவளுக்குத் தாலாட்டும் புருஷனை இழந்தவளுக்கு ஒப்பாரியும் தானாகவே வரும்" என்ற பழமொழி இக்கருத்துக்கு அரணாக விளங்குகிறது.

நமது தமிழ்ச் சமுதாயத்தில் பெண்சமுதாயம் ஒரு சார்புச் சமுதாயமாகும். ஒரு பெண்ணானவள் தன் வாழ்க்கை முழுதும் யாரையேனும் சார்ந்தே வாழுகிறாள். குழந்தைப் பருவத்தில் பெற்றோரைச் சார்ந்தும் திருமணத்திற்குப் பின்பு கணவனைச் சார்ந்தும் கணவன் இறந்து விட்டால் மகனையோ அல்லது மகளையோ சார்ந்தும் இருக்க வேண்டிய நிர்ப்பந்தம் நம் சமூக அமைப்பில் இருந்து வருகிறது. நம் சமுதாயத்தில் விதவையின் நிலையை எண்ணிப் பார்த்தால் வேதனைதான் மிஞ்சும். விதவைகளைப் பாதிக்கும் சமூகப் பிரச்சினைகளும் நிறைய உண்டு.

இறந்தவரின் பெருமையும் அவரது குணநலன்களும் பிறரால் போற்றப்பட்ட முறையும் பேசப்படுவதுண்டு. ஒப்பாரி பாடுகின்றவர்கள் இறந்தவரை நேசித்தமுறையும் தன்னுடைய நிலைமை பற்றியும் குடும்பத்தின் நிலைமை பற்றியும் பாடுகின்றனர். ஈமச்சடங்குகள் பற்றிய விவரங்களும் கூறப்படுவதுண்டு. காலனது கொடுமையும் விதியின் வலிமையும் விதவையின் பொருளாகின்றன. ஒருவருடைய மனக்குறையைப் பிறரிடம் கூறினால் மனப்பாரம் குறையும் என மனிதர்கள் எண்ணுவது இயல்பாகும். ஒப்பாரியை அவற்றின் வெளிப்பாடு (Outlet) என்றே கூறலாம். இறந்தவர்களின் ஆவி ஒப்பாரிகளால் சாந்தியடைவதாகவும் ஒப்பாரி பாடாவிட்டால் ஆவிகள் துன்புறும் என்றும் இவ்வுலகம் விட்டு மறுவுலகம் செல்ல ஒப்பாரிகள் இறக்கைகளாக உதவுகின்றன என்றும் ஆவிகள் மூலம் தீங்குவாராமல் காக்கலாம் என்றும் மக்கள் நம்புகின்றனர்.

கணவன் இறந்துவிட்டால் கனவுகளில் மிதக்க வேண்டிய மனைவி கண்ணீரில் மிதக்கவேண்டும். கணவனை இழந்த பெண்கள் படும் துயரம் வார்த்தைகளால் விபரிக்க முடியாது. கணவனை இழந்து விட்டால் அவளுக்குப் பூவும் பொட்டும் சொந்தமில்லை. அணிகலன்களால் அழகு செய்ய முடியாது. நிகழ்கால வாழ்க்கை சரிந்து வருங்காலத்தில் எண்ணற்ற துன்பங்களை எதிர்நோக்க வேண்டியவளாகிறாள். கணவனை இழந்த பெண்ணொருத்தி கணவன் இறந்த பின்பு "தாலியைக் கழற்ற மனம் ஒப்பவில்லையே என்றும் சாப்பாட்டிற்கே வழியில்லையே" என்றும் கூறி ஒப்பாரி வைக்கிறாள்.

"தாலி பெருஞ்சரடு தாழம்பூ நச்சரடு
தாலிமேல் கைவச்சா தாளாதய்யா எம்மனசு!
மாலையோ பெருஞ்சரடு மகிழம்பூ நச்சரடு
மாலைமேல் கைவச்சா மாளாதய்யா எம்மனசு!
கொத்தான பெருஞ்சரடு கோர்வையான செஞ்சரடு
கொத்துமேல் கைபோட்டா கோணுதையா எம்மனசு!

பம்ப புளியமரம் பந்தடிக்கும் நந்தவனம்
பந்தடிச்சி வீடு வந்தா பச்சத்தண்ணி யார் தருவா?
கடன் வாங்கிச் சோறுதின்னா கடன்காரன் நச்சரிப்பான்
கண்கலங்கி நிக்கையிலே கண்டசனம் பேசுமய்யா!"

கணவன் இறந்து விடுகிறான். கணவனின் இழப்பிற்கு இவர்களெல்லாம் காரணமாக இருக்கலாம். என்று எண்ணி வேதனைப்படுகின்றாள்.

"தாலிக்கு அரும்பெடுத்த தட்டானும் கண் குருடோ?
சேலைக்கு நூலெடுத்த சேணியனும் கண் குருடோ?
பஞ்சாங்கம் பாக்கவந்த பார்ப்பானும் கண் குருடோ
எழுதினவன் தான் குருடோ? எழுத்தாணி கூர் இல்லையோ?"

பெற்றெடுத்த தாய் இறந்து விட்டால். அத்தாயின் இழப்பை எண்ணி மகள் வருந்து கின்றாள். அவள் நெஞ்சிலுள்ள நெருப்பு என்று தணியும் என ஏங்கி இரங்குகிறாள்.

"தச்சன் ஓலை நெருப்பு தணியும் ஒரு சாமம்

என் தங்கமடி நெருப்பு தான் தணிவது எக்காலம்?

கொல்லன் ஓலை நெருப்பு குளிரும் ஒரு காலம்

என் கொடிய மடி நெருப்பு தான் குளிருவது எக்காலம்?"

பனை மரத்து நிழலில் பறவைகள் வந்து தங்கி இளைப்பாறுவது வழக்கம். அந்த மரம் புயலில் சாய்ந்து விட்டால் பறவைகள் தங்க நிழலின்றித் தவிக்கும். அதுபோன்று தந்தையை இழந்து நாங்கள் தவிக்கின்றோம். என்று ஒரு பெண் புலம்பிப் பாடும் பாடல் இது.

"கூந்தல் பனஞ்சோலை குயிலடையும் மண்டபங்க - நீங்க

கூந்தல் பனைசாஞ்சா - நாங்க குயிலடைய அஞ்சுறோம்பா

மட்டை பனஞ்சோலை மயிலடையும் மண்டபங்க - நீங்க

மட்டை பனைசாஞ்சா - நாங்க மயிலா அஞ்சுறோம்பா.

நீல குளத்தங்கரை - நாங்க நின்னழுவும் மந்தகரை

நின்னழுது வீடுவந்தா நீரா தண்ணி யார் கொடுப்பா?

மூன்று கதவிருக்க முத்திரை போட்டிருக்க

முத்திரையை நான் திறக்க உத்தரவு யார் கொடுப்பா?"

சீராட்டிப் பாராட்டி வளர்த்த அருமை மகளை மணக்கோலத்தில் காணவிரும்புகிறாள் தாய். மணக்கோலத்தில் காண வேண்டிய மகளைப் பிணக்கோலத்தில் காணுகிறாள். அவள் படும் வேதனைக்கு அளவில்லை.

"மணவறைப் பந்தலிலே - உன் மணக்கோலம் பாராமல்

பிணவறைப் பந்தலிலே - நானும் பேரிழவே கொள்ளுகின்றேன்"

## ஒப்பாரி காட்டும் பெண்கள் நிலை

குடும்பத்தைப் பாதுகாக்க வேண்டிய கணவன் இறந்து போனால் மனைவி பெரும் பாதிப்புக்குள்ளாகிறாள். பேரிழப்பை மட்டுமின்றி அமங்கலி என்ற சொல்லையும் தாங்கிக் கொள்ள வேண்டியவளாகிறாள். கணவனை இழந்த இழப்பைக் காட்டிலும் கைம்மை நோன்பின் கொடுரம் வேதனைக்குள்ளாக்குகிறது. விதவைகள் எந்தச் சுபகாரியத்திலும் பங்கு பெறக்கூடாது. அவள் தொட்ட காரியம் துலங்காது. எதிரே வந்தால் சகுனத்தடை என்றெல்லாம் சமூகம் நினைக்கிறது. பெண்களுக்குச்

சொத்துரிமை இல்லாத நிலையில் பெண்களுக்கு நேரும் துயரங்களை ஒப்பாரிப் பாடல்களில் காண்கிறோம். பெற்றோருக்குப் பின் பிறந்த வீட்டிலும் வரவேற்பில்லை. தன் வயது ஒத்த அண்ணி கொடுமையின் சின்னமாக நாட்டுப்புறப் பாடல்களில் சித்தரிக்கப் பட்டுள்ளாள். பெற்றோரை இழந்த பெண்ணொருத்தி தனக்குப் பொன்னும் பொருளும் சீதனமும் வேண்டாம். அன்பான வார்த்தை கூறி வரவேற்றால் போதும் என வேதனையால் புலம்புவதையும் காண்கிறோம்.

"அள்ளி கொடுக்க வேண்டாம் அரண்மனையில் பாகம் வேண்டாம்
அன்பான வார்த்தை சொல்லி - என்னை அரவணைத்தால் போதும்
பணங்காசு கொடுக்க வேண்டாம் பட்டுப்பாய் போட வேண்டாம்
பாசமுள்ள வார்த்தை சொல்லி - என்னை பராமரிச்சா போதும்
சீர்வரிசை செய்ய வேண்டாம் சிப்பக்கட்டு கட்ட வேண்டாம்
சாந்தமான வார்த்தை சொல்லி - என்னை சிரிக்க வைச்சா போதும்.

சுருங்கக்கூறின் பெண்களின் சோக உணர்ச்சிகள் முழுமையும் ஒப்பாரிப் பாடல்களில் பிரதிபலிப்பதைக் காணலாம்.

பழங்காலத்தில் கணவன் இறந்ததும் மனைவி உடன்கட்டை ஏறுதல் மரபாக இருந்தது சுந்தர சோழனுடன் மனைவி வானவன் மாதேவியும், இராசேந்திர சோழனுடன் மனைவி வீரமாதேவியும், பாண்டியன நெடுஞ்செழியனுடன் கோப்பெரும் தேவியும், பூத பண்டியனுடன் அவன் மனைவியும் உடன் கட்டை ஏறியது வரலாற்று உண்மை. கோவலன் இறந்ததும் மாதவி துறவறம் பூண்டதும் இவையெல்லாம் கணவனை இழந்தபின் மனைவி வாழ முடியாது என்பதற்காக அக்காலத்தில் இருந்த சம்பிரதாயங்கள். கணவனை இழந்த பெண்ணின் கூந்தல் களைதல் எல்லாமே ஒரு சடங்காக செய்வார்கள்.

கணவனை இழந்த பெண்கள் படும் துயரம் மிகவும் கொடுமையானது. அதிலும் திருமணத்தன்றே விதவையாகும் பெண்களின் நிலை மிகமிகக் கொடுமையானது. இந்நிலை பற்றிய ஒப்பாரிப்பாடலொன்று சுருதி மன்னர் பிரிவினரிடத்தில் வழக்கத்தில் உள்ளது.

"ஆத்திமாலை கொண்டுவந்த ஆண்டியும் போகலியே
அதிரசம் சுட்டசட்டி ஆவி அடங்கலியே
பந்தல் பிரிக்கலையே வந்தசனம் போகலியே

*2 அறியப்படாத தமிழகம்

கொட்டிநின்ற பறையனுக்கு கொத்துங் குடுக்கலியே

வெட்டுமை பார்த்தவங்க வீடு திரும்பலியே

ஆட்டக் குதிரையுந்தான் வீட்டைவிட்டுப் போகலியே

கட்டிய சேலை இன்னமும் கசங்கி மடியலியே

மாலையும் வாடலையே மஞ்சளும் காயலியே

வச்சப்பூ இன்னும் வாசங் குறையலியே

வண்ணமிட்ட கோலங்களும் இன்னமும் காயலியே

என்னுயிரே என்னுயிரே என்னைவிட்டுப் போனீரே"

கணவனை இழந்துவிட்டால் அவளுக்குப் பூவும் பொட்டும் சொந்தமில்லை. அணிகலன்களால் அழகுசெய்து கொள்ள முடியாது. நிகழ்கால வாழ்க்கை சரிந்து வருங்காலத்தில் எண்ணற்ற துன்பங்களை எதிர்நோக்க வேண்டியவளாகிறாள். கணவனை இழந்த பெண்ணொருத்தி கணவன் இறந்தபின்பு தான்மேற்கொள்ள வேண்டிய விதவைக் கோலத்தைக் கீழ்வரும் பாடலில் குறிப்பிடுகின்றாள். மங்கல கோலத்திலிருந்து அமங்கல நிலைக்கு வந்துவிட்டதனால் ஏற்படும் அதிர்ச்சியை இப்பாடல் கூறுகிறது.

"வெந்தயம் சிறுதாலி வெட்டுவச்ச சங்கிலியாம்

வெட்டுவச்ச சங்கிலிய - நான் வெலக்கி வைச்ச நாளாச்சே

சீரகம் சிறுதாலி சிவப்புவச்ச அட்டியலாம்

சிவப்புவச்ச அட்டியலை - நான் சீண்டாத நாளாச்சே

காஞ்சி கழட்டி வச்சேன் காலு வரை வெள்ளை யிட்டேன்

மூக்குத்தியக் கழட்டி வச்சேன் மூஞ்சி மட்டும் வெள்ளையிட்டேன்"

என்ற ஒப்பாரிப்பாடல் கைம்மைக் கோலத்தைக் கண்முன் நிறுத்துகிறது.

## விதவையர் நிலை

கணவன் இறந்து விட்டால் மனைவி சமுதாயத்தில் பற்பல தொல்லைகளுக்கு ஆளாகிறாள். கணவனைக் கொன்றவள், தின்றவள், சண்டாளி என்ற பெயரோடு விதவைப் பட்டத்தையும் சுமக்கிறாள். தலை மொட்டையடிக்கப்பட்டு வெள்ளைச் சேலை அல்லது பழுப்படைந்த காவி நிறச் சேலை உடுத்தி மலர், குங்குமம் அணிகலன்கள் (தாலி, மூக்குத்தி) போன்றவை கழற்றப்பட்டு வெறுமைத் தோற்றம்

உடையவளாய் இருப்பதை இன்றும் காணமுடிகிறது. இக்கருத்தைக் கணவனில்லாமல் மனைவி மஞ்சள், பூ வைத்துக் கொள்வது பிற ஆடவருக்கும் காமம் வரக்கூடும் என்பது ஒருவரின் கருத்தாகும். அதனால்தான் கட்டாயமாக பெண்கள் இப்படித்தான் இருகக வேண்டும் என்று சமுதாயம் வற்புறுத்துகிறது. கணவனை இழந்த பெண்கள் சமுதாயத்தில் மிகுந்த துன்பத்திற்கு ஆளாகின்றனர். அஃது இன்றும் உள்ளது. தலையை மழித்தலும் வளையல் முதலிய அணிகளை நீக்கிவிடுதலும் பூவை விலக்குதலும் எளிய உணவினை உண்ணலும் பாயின்றிப் பரல் பரவிய தரையிற் படுத்தலும் அவர்கள் மேற்கொண்டனவாகும். மறுமையிலும் கணவனை அடைய இந்நோன்பு உதவும் என ஒருவர் கூறுகிறார்.

கணவனை இழந்த மனைவியின் நிலையை "மனைவிக்கு கணவன்தான் சிறப்பு தருகின்றான். ஆளன் இல்லாத பெண் சமூக மதிப்பை இழக்கின்றாள். கைம்பெண் என்று அவளைப் புறக்கணிக்கின்றது சமூகம். ஆளன் இல்லாத மங்கைக்குஅழகு பாழ், ஆளன் இல்லாதவள் ஆற்று மணலுக்குச் சரி" என்பவை இக்கருத்தை வலியுறுத்து கின்றன. இன்றும் நல்ல செயலுக்காக வீட்டைவிட்டு வெளியில் புறப்படுவோர் விதவை எதிரில் வந்தால் அபசகுனம் என்று எண்ணி வீட்டிற்குத் திரும்பிவரும் நிலையினைப் பார்க்கிறோம். தனனைப்போலவே போகும் செயலையும் வெறுமையாக்கி விடுவாள் கைம்பெண் என்ற நம்பிக்கை இம்மக்களிடம் நிலவிவருகிறது. எதிர்ச்செல்லல், காலையில் கண்விழித்தல், மங்கல காரியங்களை காரியங்களில் தள்ளி வைத்தல் போன்றவைகளால் விதவையர் சமுதாயத்தின் பின்நிலைக்குத் தள்ளப்படுகின்றனர் என்பதை அறியமுடிகிறது.

கணவன் இறந்ததும் மனைவி மொட்டையடித்துக் கொள்ளுதல், வெள்ளைச் சேலை உடுத்திக் கொள்ளுதல், குங்குமம், மலர், ஆபரணங்களை ஒதுக்குதல், மதச்சடங்குகளின்போது மறைந்து நிற்றல் ஆகிய தண்டனைகள் இன்றும் வழக்கமாக நடைபெற்றுக்கொண்டே இருக்கின்றன. இவைகள் எல்லாம் இப்பொழுது சிறிது சிறிதாக அற்றுப் போகின்றன.

இக்காலத்தில் அநேகமாக இறப்புகள் வைத்தியசாலைகளிலேயே நடக்கின்றன. அங்கேயே அவர்கள் மூலம் Empharm பண்ணி அழகாக உடுத்து பெட்டியில் வைத்து வீட்டிற்குக் கொண்டுவந்து கிரிகைகள் செய்கின்றனர். குளிப்பாட்டுவது போன்ற கிரிகைகள் செய்ய முடியாது. எனவே இவர்கள்முன் கண்ணாடியை வைத்து அதற்கு ஸ்நானம் செய்கின்றார்கள் இதைவிட நகரங்களில் வாழும் மக்கள் இடவசதி,

சுற்றாடல், சுகாதார சட்ட திட்டங்களுக்கு அமைய மாறுபாடுகளுடன் கிரிகைகள் செய்யப்படுகின்றன. புலம் பெயர்ந்த மண்ணில் அநேகமாக ஒருவர் இறக்கும் தருணத்தில் அவர் உறவினர்கள் கூட இருக்க அனுமதிக்கப்படுகின்றனர். பின்பு சிலமணிநேரம் அநத உடலை நெருங்கிய உறவினர்கள் பார்வை இடலாம். கவலைதீர அழக்கூட முடிவதில்லை. (இது மறற நோயாளர்களைப் பாதிக்கும்) பின்னர் ஏதாவது ஒரு Funeral Homeக்கு கொடுக்கப்படுகின்றது. இதன்பின் ஓரிருநாட்கள் சில மணித்தியாலங்கள் பார்வையிடலாம். அதன்பின் கிரிகைகள் செய்து Gas இல் தகனம் செய்து இரண்டு மூன்று மணித்தியாலங்களில் சாம்பல் தரப்படுகின்றன. இந்த முறையில் அநேகமாக எத்தனையோ கிரிகை முறைகள் சந்தர்ப்ப வசமாக தவிர்க்கப்படுகின்றன. காரணம் நாட்டு சூழல் சுகாதார சட்டதிட்டங்களுக்கமைய பாதுகாக்க வேண்டிய கடமை.

## பண்பாட்டு அசைவு *2

நமது மக்கள் பண்பாடு மிகுந்தவர்கள். சோகத்தினூடேயும் அசைவுகள் மூலம் நுட்பமாகவும் மென்மையாகவும் தமது நிலைப்பாட்டை அடையாளம் காட்டிக் கொள்வார்கள். ஒரு சிறிய நிகழ்ச்சி இது, இந்தியாவில் திருநெல்வேலி மாவட்டத்தில் நிகழ்ந்த கதை. "ஆதாரம் அறியப்படாத தமிழகம்" என்னும் நூலில் இருந்து.

நெல்லை மாவட்டத்தில் உள்ள ஒரு சிறிய கிராமம். இருபத்தி எட்டு வயதுடைய இளைஞர் ஒருவர் விபத்தொன்றில் இறந்து போனார். அவருடைய மனைவிக்கு வயது இருபத்து மூன்று. மூன்று வயதில் ஒரு பெண் குழந்தை இருந்தது.

அந்தப் பிற்பகல் நேரத்தில் பிணத்தை எடுத்துச் செல்ல ஊரே திரண்டிருந்தது. ஆண்கள் இழவு வீட்டிற்கு வெளியிலே வாங்குகளில் அமர்ந்திருந்தனர். வேறு சிலர் நின்று கொண்டிருந்தனர். ஒரு புறத்தில் இறுதி ஊர்வலத்திற்கான மேளச் சத்தம் ஒலித்துக் கொண்டிருந்தன. வீட்டிற்குள் பெண்கள் உரத்த குரலில் அழுது கொண்டிருந்தனர்.

திடீரென்று மேளச் சத்தம் நின்றது. இழவு வீட்டிற்கு உள்ளிருந்து ஒரு மூதாட்டி வெளியில் வந்தார். பேசிக்கொண்டிருந்த ஆண்கள் பேச்சை நிறுததினர். அம்மூதாட்டியின் கையில் தண்ணீர் ததும்பி வழியும் செம்பொன்று இருந்தது. அந்தத் தண்ணீர்ச் செம்பை அவர் கூட்டத்தின் நடுவில் வைத்துவிட்டு நிமிர்ந்தார். அவரது வலக்

*2 அறியப்படாத தமிழகம்

கையில் ஏதோ மடக்கி வைத்திருந்தார். கூர்ந்து பார்த்ததில் அவை உதிரிப் பிச்சி முல்லைப் பூக்கள் என்று தெரிந்தன. அவர் கூட்டத்தை ஒருமுறை நிதானமாகத் திரும்பிப் பார்த்தார். பின்னர் கையில் இருந்த பிச்சிப் பூக்களில் ஒன்றைச் செம்பில் நிறைந்த நீரின்மீது இட்டார். கூட்டம் மூச்சடங்கியது போல அமர்ந்திருந்தது. பின்னர் கையில் இருந்த பிச்சிப் பூக்களில் ஒன்றைச் செம்பில் நிறைந்த நீரின்மீது இட்டார். பின்னர் இன்னொரு பூவைச் செம்புத் தண்ணீரின் மேலிட்டார். இரண்டு பூக்கள் செம்பு நீரில் மிதப்பது எல்லார் பார்வைக்கும் தெரிந்தது. கூட்டத்தில் இருந்த பெரியவர்கள் "ச்சூ, ச்சூ' என்று அனுதாபத்தோடு ஒலி எழுப்பினர். பின்னர் அம்மூதாட்டி மூன்றாவது பூவையும் செம்பு நீரில் இட்டார். கூட்டம் மறுபடியும் அனுதாப ஒலி எழுப்பியது. ஒன்றிரண்டு நொடிகள் கழிந்த பிறகு அந்தப்பெண் நீரிலிட்ட மூன்று பூக்களையும் கையில் எடுத்துக்கொண்டு செம்புத் தண்ணீரைத் தரையில் கொட்டிவிடடு விடுவிடென்று இழவு வீட்டிற்குள் சென்று விட்டார். கூட்டத்தில் அனுதாப ஒலியோடு பேச்சும் எழுந்தது. "ம் பாவம்... என்னாத்தைச் சொல்றது" என்று அங்கலாய்த்தனர்.

இதன் கருத்து என்னவென்றால் இறந்தவருடைய மனைவி 3 மாத கர்ப்பிணியாக இருக்கின்றாள். எனவே ஏழு மாதத்தின்பின் குழந்தை பிறக்கும். குழந்தைக்கு இவர் தான் தகப்பனென்று ஊரும் உலகும் அறிய அந்த சடங்கு பிரகடனம் செய்திருக்கின்றது.

முற்காலத்தில் மக்களின் தேவைகளின் பொருட்டு மக்கள் பிரிவுகள் இருந்தன. இவர்கள் குடிமக்கள் எனக்கூறப்பட்டனர். முடிவெட்டுதல், துணி துவைத்தல், மேளம் அடித்தல் எனப் பலவகையான பிரிவுகள அவரவர் தொழில்களை சார்ந்து இருந்தன. ஒவ்வொரு சடங்குகளிலும் இவர்களுக்கு என தனியான வேலைகள் உண்டு.

ஒரு மரண வீட்டில் ஒரு குடியானவன் இறந்து போனால் பந்தல் போடுதல், தோரணம் கட்டுதல், நெருப்பு சட்டி (கொள்ளிச்சட்டி) தயார் செய்தல், பொரி பொரித்தல், பாடை கட்டுதல், பாவாடை விரித்தல் உரிமை உள்ளவர் தோட்டத்தில் மரம் தறித்து நெஞ்சாங்கட்டை வைத்தல் எல்லாவற்றிற்கும் மேலாக மயானத்தில் இருந்து இறந்தவர் உடலை மிருகங்கள் இழுத்துப் போகாமல் அரைகுறையாக எரியாமல் கடைசிவரை காவல் இருந்து எரித்தல் அவருடைய குடிமக்களே செய்வார்கள். இது அவர்களுடைய கடமை மட்டுமல்ல; உரிமையும்கூட. இது மக்களிடையே இருக்கின்ற கூட்டு வாழ்க்கை, அன்னியோன்யம், கடமை, கட்டுப்பாட்டிற்கு ஓர் உதாரணமாகும்.

புலம் பெயர்ந்த நாட்டில் வாழுகின்ற மக்களுக்கு இன்று இவையெல்லாம் பொய்யாய் பழங்கதையாய் கனவாய் போய்விட்டன.

## இறப்புச் சடங்குகள்

### இறந்தவுடன் வீட்டில் நடைபெறும் சடங்குகள் *3

தொடக்க காலத்தில் கூட்டங் கூட்டமாக வாழ்ந்து வந்த மனிதன் தன்னோடு வாழ்ந்துவந்த மற்றொரு மனிதன் திடீரென்று இறந்ததைக் கண்டு பயந்தான். ஆகவே அவ்வாறு ஏற்படும் பயத்தைப் போக்கிக்கொள்ள பலவகைச் சடங்குகளைச் செய்யத் தொடங்கினான். ஆதி மக்களின் மனதில் சாவு மிகுந்த அச்சத்தை விளைவித்தது சாவைத்தரும் ஆவிகளைத் திருப்திப்படுத்த பல சடங்குகளை மேற்கொள்ளலாயினர். இச்சடங்குகளை ஈமச்சடங்குகள் என்றழைத்தனர். இவ்வாறு சடங்கு செய்தால்தான் இறந்தவரின் இறுதிப்பயணம் சுலபமாக இருக்கும் என்றும் உலகினுக்கு அப்பால் செல்வது எளிதாக இருக்கும் என்றும் பண்டைய மக்கள் நம்பினர்.

எவ்வகை நிகழ்ச்சிகளின் போதும் உலகமனைத்திலும் ஒரே விதச் சடங்குகள் அமைவதில்லை. ஒரே நிகழ்ச்சிக்குரிய சடங்குகளாக இருந்தாலும் அதனை இடத்திற்கும் நாட்டிற்குத் தகுந்த சடங்குகளாக மாற்றுகின்றனர். மகனில்லை என்று தாய் ஏங்கிப்பாடும் ஒப்பாரிப் பாடல்களின் வழி இறப்புச் சடங்குகள் அது தொடரபான நம்பிக்கைகள் பலவற்றையும் அறியமுடிகிறது.

சாம்பிராணி, சூடம், பத்தி போன்றவைகளை இறந்த பின்னர் சிறிது நேரமும் எடுப்பதற்குச் சிறிது நேரத்திற்கு முன்னரும் தூப தீபமாய்க் காட்டி எரியவிடுவதால் எரியும் வெளிச்சம் இறந்தோரை மேலுலகத்திற்கு அழைத்துச் செல்லும் வழி காட்டியாகவும் அதிலிருந்து வெளிவரும் புகையே ஆவிகளை அருகில் அணுகவிடாமல தடுப்பதாகவும் எண்ணுகிறார்கள். முழுநேரம் எரியவைத்தால் பிணததின் கெட்டநீர் வடிந்துவிடும் என்று அறிவியல் கருத்தை இவர்கள் அறிந்துள்ளதை இதன்மூலம் அறியமுடிகிறது. புறநானூற்றில் 'ஐயலி சிதறி' எனத்தொடங்கும் பாடல் தீய ஆவிகள் அணுகாமல் காத்தலை விளக்குகிறது. அதன்பின் பிணத்திற்கு மாலை போட்டு அனைவரும் தொட்டு வணங்குவர். இறைபதம் அடைநதுவிட்டதால் இறைவனுக்குக் கொடுக்கும் மரியாதை இறந்தவருக்கும கொடுக்கப்படுகிறது. இந்த நம்பிக்கையில்தான் ஒருவர் உயிர் பிரிந்ததும் சிவபதம் அடைந்தார். சிவலோகப்பதவி அடைந்துவிட்டார் என்னும் தொடர்கள் வழங்கப்படுகின்றன.

இறந்தோரின் ஆன்மா சாந்திபெற்று மறு உலகில் நிலைபெறவும் அவரது இழப்பால் இன்னலுறும் மக்கள் துக்கத்தை மறந்து அன்றாடக் கடமைகளில் ஈடுபடவும்

*3 பார்க்கவகுலச் சடங்தகளும் நம்பிக்கைகளும

இறப்புச் சடங்குகள் எல்லாச் சமுதாயத்தாராலும் நடத்தப்படுகின்றன. சமுதாயத்தில் இறப்பு என்பது ஒரு துக்க நிகழ்ச்சியாகும். இறப்பினை எக்குடும்பத்தாரும் ஏற்பதில்லை. எந்நேரத்தில் எவருக்கு இறப்பு நேரும் என்பதனை எவராலும் அறியமுடியாது. இறப்பு நேர்ந்த குடும்பம் தீட்டுப்பட்டதாகக் கருதப்படுகிறது. மரணம் அடைந்தவரின் நெருங்கிய உறவினர்களுக்குக் குறிப்பிட்ட காலம்வரை தீட்டு உண்டு. இத்தீட்டு நீராடுவதால் மட்டுமே போகக் கூடியதன்று, சடங்குகள் மூலமாகவே போக்க இயலும். இறப்புச் சடங்குகளைச் செய்வதால் அவர்களது ஆன்மா எவ்விதத் தடையுமின்றி மறுஉலகு சென்றடையும் என்ற நம்பிக்கை மக்களிடையே இருந்து வருகிறது. எனினும் உலக வழக்கின்படி குடும்பத்தார் தீட்டு நீங்கிச் சமுதாயத்தாரோடு இணைந்து கொள்ள இறப்புச் சடங்குகள் நடத்தப்படுகின்றன.

இறப்புச் சடங்குகளை இறப்பிற்கு முன்னர் நடத்தப்பெறும் சடங்குகள், இறந்தவுடன் நடத்தப்பெறும் சடங்குகள், இறப்பிற்குப் பின்னர் நடத்தப்பெறும் சடங்குகள் என மூன்றுவகைப் படுத்தலாம்.

## இறப்பிற்கு முன் நடைபெறும் சடங்கு (உத்கிராந்திக் கிரியை)

ஒருவர் உயிர் பிரியும் நிலை அடையும்போது (மரணவேளை) சுற்றத்தவரிடத்தும் பொருள் இடத்தும் உள்ள பற்றை நீக்கி, விபூதி பூசிச் சிவபெருமானைத் தியானித்து தேவாரம், திருவாசகங்களைச் சிவனடியவரைக் கொண்டு பாடக் கேட்க வேண்டும். இவ்வேளை (பசு) கோதானம் செய்வது சிறந்ததாகும்.

அவருடைய மகன் அல்லது சுற்றத்தவருள்ளே சமயதீட்சை உடையவர் மனம் கலங்காது புண்ணியதலத்து விபூதி பூசி அவர் உடம்பில் வில்வத்தடி மண்பூசி அவர் வாயில் கங்கா தீர்த்தம் அல்லது பால்விட்டு அவர் தலையைத் தம்மடிமீது வைதது அவர் செவியில் ஸ்ரீ பஞ்சாட்சரத்தை உபதேசித்து செவியைக் கையினால் மூட வேண்டும். உயிர் நீங்கிய பின் உடலைச் சுத்தி செய்து அலங்காரம் செய்து நிலத்தைத் தூய்மைப்படுத்தித் தர்ப்பை பரப்பி தெற்கே தலை இருக்கத்தக்கவாறு கிடத்தவும். காற்பெருவிரல் இரண்டையும் துணியால் கட்டி விடவும். இதேபோல கைப்பெருவிரல் இரண்டையும் சேர்த்துக் கட்டவும். காலைத் தலையுடன் சேர்த்துக் கட்டிவிடவும். உப்பைப் பொட்டலமாகக் கட்டிப் பிரேதத்தின்மீது வைத்தலும் பிரேதத்திற்குக் கீழே நீர் நிரம்பிய பாத்திரம் வைத்தலும் உண்டு. உடலை வெள்ளைத் துணியால் முழுமையாய்

முடிவிடவும். தலைப்பாகத்தில் குத்துவிளக்கு ஏற்றி வைக்கவும். மனைவி, மக்கள், சுறறத்தவர் அருகில் இருந்து தேவார திருவாசகங்களைப் பக்தியுடன் ஓதவேண்டும்.

அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்தரட்டாதி, ரேவதி ஆகிய ஐந்து நட்சத்திரங்களும் தனிஷ்டா பஞசமி எனப்படும். இப்பஞ்சமியில் ஒருவர் இறந்தால இதற்கு தானம், சாந்தி செயயின் தோஷம் நிவரத்தியாகும்.

## சூர்ணோற்சவம் வீட்டில் நடைபெறும் கிரிகைகள் *4

இறந்தவர் வீட்டு முற்றத்தில் பந்தல் அமைத்து, வெள்ளை கட்டி, மாவிலை தோரணம் கட்டல் வேண்டும். இங்கு அமைக்கும் பந்தல் தட்டைப்பந்தலாயும் மேலே வேயப்படும் ஓலை பச்சை ஓலையாயும் இருக்க வேண்டும். வீட்டு வாயிலிலே மொந்தன் வாழை, குலையுடன் கட்டல் வேண்டும். நிலத்தைப் பசுஞ்சாணத்தால் மெழுகி மண்டபத்தை மூன்றாகப் பிரித்து மாக்கோலமிட்டு மண்டபத்தில் மேற்கே நடுவில் சிவகும்பமும் சூழ எட்டுக் கும்பமும் வைக்கவும். இறந்தவர் சமய தீக்ஷிதராயின் உருத்திர மூர்த்தியையும் விசேட தீக்ஷிதராயின் ஈசுவரமூர்த்தியையும் நிர்வாண தீக்ஷிதர் ஆசாரி அபிடேகம் பெற்றவராயின் சதாசிவ மூர்த்தியையும் நடுக் குமபத்திலும் சூழ உள்ள கும்பங்களில் ஈசானம் முதல் கிழக்குவரை ஈசானன், குபேரன், வாயு, வருணன், நிருதி, யமன், அக்கினி, இந்திரன் ஆகியோரைப் பூசிக்க வேண்டும். நடுவே அக்கினி காரியத்திற்கெனக் குண்டம் ஒன்று அமைத்து அதற்குக் கிழக்கே உரல் உலக்கையையும் அதற்குக் கிழக்கில் பேரி தாடனத்திற்காகப் பேரியையும் வைக்கவும்.

உரல் உலக்கைக்கு மாவிலை, கூர்ச்சம், கோடி வஸ்திரம் கட்டி மலர் மாலையால் அலங்கரித்து உரலினுள்ளே அறுகும் மஞ்சள் மாவும் இடவும். உரலைச் சூழ நல்லெண்ணெய், அரப்பு, எலுமிச்சம்பழம, அபிடேகப் பொருட்கள், இறந்தவர் உடலுக்கு அணியும உடுபுடைவை என்பவற்றை வைக்கவும். உரலுக்குப் பக்கத்தே ஒரு கும்பம் வைத்து அதில் பாசுபதாஸ்திர தேவரைப் பூசிக்கும்படி காரணாகமத்தில் உள்ளது. இக்கும்ப சலத்தில் சுண்ணப பொடியைக் குழைப்பர. குண்டத்திற்கு வடக்கே மண்குடத்தில் சுடலைக்குக் கொண்டு செல்லும் உருத்திர கும்பம் அமைத்தல் வேண்டும். ஸ்நபன கும்பத்திற்குத் தெற்கே புண்ணியாகவாசன கும்பத்தையும் பஞ்ச கௌவியத்தையும் அமைக்கவும்.

*4 இந்துப் பாரமபரியம்

## இறுதிக்கடன் செய் பொறுப்பு

ஆண் குழந்தையின் இன்றியமையாத செய்கையாகவும் கடமையாகவும் பெரிதும் சிறப்பித்துப் பல்வேறு நம்பிக்கைகளுக்கு உட்படுத்தப்பட்ட சடங்குமுறை இறந்தோருக்கு இறுதிக்கடன் ஆற்றலே ஆகும்.

"கருமம் செய்யவும் கொள்ளி வைக்கவும் வயிற்றில் பிறந்த மகனே உரிமை உள்ளவன். கருமம் செய்யப் பிள்ளை உடையவர்கள் ஒரு குறையும் இல்லாதவர்கள்" என்று மக்களின் நம்பிக்கையை விளக்கப்பட்டுள்ளது. இவ்வகையில் இடுகாட்டில் பெற்றோர்க்குரிய தீக்கடனையும் தந்தைக்கு மூத்த மகன், தாய்க்கு இளைய மகன் கடமை செய்தல் வேண்டும். மகன் இல்லாதபோது மனைவி, கணவன், மகள், சகோதரன், அவர் மகன், தந்தை, தாய, மருமகள், சகோதரி, சபிண்டன், சமானோதகன், சீடன், குரு, தோழன், அரசன் ஆகிய இவர்களுக்குள் முன்னவர் இல்லாத இடத்தில் அடுத்தவர் கிரியை செய்யலாம். மகன், மனைவி, மகள் தவிர்ந்த ஏனையோர் கிரியை செய்யின் அவர்கள் தந்தை அல்லது தாய்க்கு கடமை செய்தவராய் இருக்க வேண்டும்.

கிரியை செய்பவர் சவரம் செய்து நீராடி கோடி வஸ்திரம் இரண்டு அணிந்து அனுட்டானம் முடித்தல் வேண்டும். குரு அவரிற்கு விபூதி கொடுத்து பூநூல் அணியச் செய்து சங்கற்பம் செய்து கொள்வார். விநாயக பூஜை, புண்ணியாக வாசனம முதலிய கிரியைகளைச் செய்து புண்ணியாக பஞ்சகௌவியத்தை மண்டபத்தில் தெளித்து இடத்தைச் சுத்திசெய்து நெற்பொரிகளை மண்டபத்தில் இறைத்துக் கொள்வர். கிரியை செய்வருக்கு பஞ்ச கௌவியம் பருகக் கொடுக்கக் கூடாது. கிரியை நடைபெறும்போது திருமுறைப்பாடல்களை ஓதுதல் வேண்டும். குரு அங்க நியாசம், கர நியாசம, சிவோகம் பாவனை செய்து ஸ்நபன கும்பபூசை முடித்து அக்கினி காரியம் முடிதது பூரணாகுதி கொடுத்து கிரியையைப் பூர்த்தி செய்யப்படும். கிரியை செய்பவரிடம் நெற்பொரி கொடுத்து அதைப் பிரேதத்தின்மீது போட்டுக் கற்பூர தீபங்காட்டியபின் பிரேதத்தை குளிப்பாட்டுவதற்காக வீட்டின் பின்புறம் எடுத்துச்சென்று தலை தெற்காகக் கிடத்தி ஆசௌசிகள் அரப்பு எண்ணெய் வைப்பர். கிரியை செய்பவர் மேற்கு முகமாக நின்று நல்லெண்ணெய், அரப்பு என்பனவற்றை பிரேதத்தின் சிரசில் வைப்பர். பின்பு அரிசி மா, மஞ்சள் மா, பால், தயிர், இளநீர் அபிஷேகம் செய்து பின் பஞ்ச கௌவியம், கும்பநீரால் அபிஷேகம் செய்ய வேண்டும். கிரியை செய்பவருக்கு இடது கைமேல் வலது கையை வைத்துப் பிடிக்க வேறு ஒருவர் உதவியுடன் கிரியை செய்பவரின்

புறங்கையினால் அபிஷேகம் செய்ய வேண்டும். பின் அத்தர், பன்நீர் முதலிய வாசனைத் திரவியம் தெளித்து பிரேதத்தை அலங்காரம் செய்து மண்டபத்திற்குக் கொண்டு வரவேண்டும். தலை தெற்கில் இருக்கக் கூடியதாகக் குருக்களுக்கு இடப்புறமாக வைத்து திருநீற்றை நீரில் குழைத்து சத்தியோசாதம் முதலாக முழந்தாள், தொப்புள், மார்பு, நெற்றி, சிரசு, புயம், இரண்டு முழங்கை, இரண்டு மணிக்கட்டு, இரண்டு விலா, முதுகு, கழுத்து ஆகிய இடங்களில் உரிய மந்திரத்துடன் பூசி பன்நீரால் கைகழுவி நீரைப் பிரேதத்தின் சிரசில் தெளிக்கவும். இவ்வேளையில் திருநீற்றுப் பதிகம் ஓதல் வேண்டும். சநதனம் குங்குமத் திலகமிட்டுப் பூமாலை சாத்தவும்.

## சுண்ணம் இடித்தல்

உரலில் பூமா தேவியையும் உலக்கையில் மேரு மலையையும் பூசித்து (வையகமெலாம் உரலாக மாமேரு வென்றும் உலக்கை நாட்டி) அறுகு, மஞ்சள்மா என்பவற்றை உரலில் இட்டு எண்பத்தொரு பதமந்திரம் சொல்லி மூன்றுதரம் இடித்துப் பின் திருவாசகத்தில் உள்ள திருப்பொற் சுண்ணப்பாடல்பாடி இடித்தல் வேண்டும். பஞ்ச புராணம் பாடி நிறைவு செய்து வெற்றிலையில் சுண்ணப்பொடியை எடுத்து உரலுக்குப் பக்கத்தில் உள்ள கும்பநீர் விட்டுக் குழைத்து கிரியை செய்பவர் நெற்றியில் பொட்டிட்டு அணிந்து, பிரேதத்தின் இரண்டு கண்களிலும் சாத்தி மிகுதியை உடல் முழுவதிலும் தெளித்து விடுவர். சுண்ணம் இடிக்கும்போது இறந்தவரின் பேரப்பிள்ளைகள் முதலானோர் பிரேதத்தை சூழ நின்று பந்தம் பிடிப்பர்.

சுண்ணம் இடித்தல் பிரேத ஸ்நானத்திற்குமுன் நிகழ்வதுதான் முறையானது. நம்மவர்களின் ஆசாரக் குறைவு கருதி பிரேத சுத்தியின் பொருட்டு சிவகும்ப ஸ்நானம் முடித்து அதன்மேல் சுண்ணப்பொடி தெளிக்கப்படுகிறது. இறந்தவர் நற்கதி அடையவேண்டித் தானம் கொடுத்தலும் பிரேத யாத்திரையின் பொருட்டு யாத்திரா தானமும் நிறைவு செய்து குருக்களுக்குத் தட்சணை கொடுக்கப்படும்.

மனைவி, மக்கள், சுற்றத்தவர் (பெண்கள்) இடப்புறமாகச்சுற்றி வந்து வாய்க்கரிசி இடுவர். (வாய்க்கரிசி - பச்சை அரிசியும் தேங்காய்த துருவலும் சேர்த்தது) மனைவி, மககள் பிரேதத்தின் காலில் பூப்போட்டு வணங்குவர். கணவன் இறந்தால் மனைவி தாலியை கழற்றிப் பிரேதத்தின் நெஞ்சில் வைக்க வேண்டும். சுமங்கலி இறந்தால் நிறைநாளியை (தீபம், நெல் நிறைந்த சேர்) பிரேதத்தின் கையால் தொடச் செய்து

வீட்டின் உள்ளே வைக்க வேண்டும். தேங்காய், வெற்றிலை, பாக்கு, வாழைப்பழம் என்பவற்றை சேலை முந்தானையில் முடிந்து விடவும். பிரேதத்தின் கீழே உள்ள துணியையும் மேலே உள்ள துணியையும் சேர்த்து பிரேதத்தை மூடி தலைப்பகுதியில் ஒரு முடிச்சிடவும் கீழே உள்ள ஆர்க்கை துணியால் மூன்றிடத்தில் கட்டவும்.

யாகத்திற்குரிய மரங்களில் பச்சை மரத்தில் கட்டப்பட்ட பாடையில் பச்சைத் தென்னை ஓலைப் பன்னாங்கில் பிரேதத்தை வைக்கவும். பாடை கமுகு மரத்தால் கட்டப்படும். பெணகள் பாடையை இடமாக மூன்றுமுறை சுற்றி வந்தபின் பிரேதம் மயானத்திற்குக் கொண்டு செல்லப்படும். காற்பக்கம் முன்னாகப் பிரேதத்தை எடுத்துச் செல்ல வேண்டும். கிரியை செய்பவர் கும்பத்துடன் முன்னே செல்ல புகையுடன் கூடிய நெருப்பை மூன்று காலுடைய உறியில் வைத்து குனிந்த தலையுடன் சுற்றத்தவர் பின்னேவர வீட்டின்முன் வாயிலால் செல்லாமல் வேறு பாதை வெட்டி பறை முழங்க வெடி கொழுத்தி கொள்ளி வைப்பவர் நடந்து வருவதற்காக நடைபாதையில் வண்ணார் துணிவிரிப்பார்கள். இதை நடைபாவாடை விரித்தல் என்றழைப்பார்கள். இந்த விரிப்பில் கொள்ளி வைப்பவர் கைகளில் தீச்சட்டியைப் பிடித்தவாறே செல்ல அதை எடுத்துக்கொண்டே இடுகாடுவரை வண்ணார் விரித்துச் செல்வார். இடுகாட்டிற்குச் செல்லும்போது வழியில் பூக்களையும் நெற்பொரியையும் இறைத்துக்கொண்டு செல்வர். பிணத்துடன் தீய ஆவிகள் உறைந்திருக்கும். இதனால் பிணம் மயானததை நெருங்க நெருஙக கனக்க ஆரம்பிக்கும். அதாவது அங்குள்ள ஆவிகள் இதனை வரவேற்க வரு கின்றன என்பது இதன் பொருள். மலர்களை வீசுவதால் அவற்றின் மணத்தால் ஈர்க்கப் பட்டு ஆவிகள் இறங்கி வந்து பூக்களையும் நெற்பொரிகளையும் பொறுக்க ஆரம்பிக்கும். இதனால் பிணத்தைத் தூக்கிச் செல்ல எளிமையாக இருக்கும் என்ற நம்பிக்கையும் நிலவுகிறது. பிணம் தெருமுனைக்குச் செல்லும்வரை பெண்கள் மாரடித்து அழுவர்.

## இடுகாட்டில் நடைபெறும் சடங்குகள்

இறந்தவர்கள் நற்கதியடைய இடுகாட்டிலும் சிலசடங்குகள் செய்யப்படுகின்றன. வேறுபட்ட நாகரிகங்களில் இறப்பிற்குப்பின் வாழ்வுபற்றி என்னென்ன கருத்துக்கள் இருந்தாலும் பொதுவாக இறப்பு என்பது ஒரு முடிந்த முடிபன்று. அது ஒரு குறிப்பிட்ட உலகிலிருந்து அல்லது நிலையிலிருந்து வேறொன்றிற்குச் செல்லுதலாகும். பிரிநிலை, மாறுநிலை, இணைநிலை என்ற மூன்ற நிலைகள் மரணத்திற்குப்பின் இருப்பதாகக்

குறிப்பிடப்படுகிறது.

இதுபற்றியே இறந்தவர்கள் முறைப்படி அடக்கம் செய்யப்படுகின்றனர். அவ்வாறு செய்வதனால் இறந்து போனவரின் ஆவி எவ்விதச் சஞ்சலமுமடையாமல் சாந்தியடைவ தாகவும் இருப்பவர்களுக்கு எவ்விதத் தூன்பமும் தராதிருப்பதாகவும் நம்புகின்றனர்.

இறந்தோரை இருப்போரின்றும் பிரித்து முன்னால் இறந்துபோன மூதாதையருடன் சேர்ப்பதாகும் என்று ஈமச் சடங்குகளின் உள்நோக்கம் பற்றிக் கருத்துரைக்கப்படுகிறது. முறைப்படி அடக்கம் செய்யப்படாத பிணங்கள் புதைகுழியிலிருந்து வெளியேறி வாழ்பவர்களைத் தாக்கி அவர்களின் இரத்தத்தை உறிஞ்சிவிடும் தன்மையன என்று பழைய மெசப் மொடிய மக்கள் நம்பினர். இக்கருத்து நாளடைவில் உலகில் எல்லாப் பகுதிகளுக்கும் பரவிவிட்டது இக்காரணிகளால் ஈமச்சடங்குகள் மிகமுக்கியமானதாகக் கருதப்பட்டன. ஈமச் சடங்குகள் இடத்திற்கு இடம் இனத்திற்கு இனம் மாறுபட்டதாக இருந்தன. பிணங்கள் ஐவகை முறைகளால் அடக்கம் செய்யப்பட்ட நிலையினை,

"சுடுவோர் இடுவோர் தொடுகுழிப் படுபோர்
தாழ்வயின் அடைப்போர் தாழியிற் கவிழ்ப்போர்"

என மணிமேகலை குறிக்கின்றது.

வடக்குத் தெற்காக விறகுகளை அடுக்கி அந்த சிதாஸ்தானத்தில் தலை தெற்கே இருக்கப் பிரேதத்தை வைத்துச் சுற்றத்தவர் வாய்க்கருசி போடவும். சுமங்கலி இறந்தால் அவரின் கணவன் முந்தாணையில் முடிந்த தேங்காய், வெற்றிலை, பாக்கு, பழம் என்பவற்றை எடுத்து வைத்து தேங்காயை உடைத்து தாலியை அவிழ்த்து (கழற்றி) எடுக்கவும். கிரியை செய்பவர் சிவகும்பத்தை இடது தோளில் வைத்து இடப்புறமாகச் சுற்றி வந்து தலைப்பாகத்தில் வைத்து அதன் கழுத்துவரை உடைத்தெடுத்து கும்பநீரில் அரிசியை நனைத்துக் காசுடன் தற்புருஷ மந்திரத்தால் வாய்க்கரிசி இடவும் குடத்தையும் கொள்ளியையும் கொண்டு இடமாக மும்முறை சுற்றி வரவும். ஒவ்வொரு முறையும் குடத்தில் ஒவ்வொரு துவாரம் செய்து ஒழுகும் நீரை சிதையில் தெளிக்கவும். தலைமாட்டில் தெற்கு நோக்கி நின்று கொள்ளியை வைத்து குடத்தை முன்பக்கத்திற்குப் போட்டு உடைக்கவும். பின் கால்மாட்டில் சென்று பவித்திரம், பூநூல் என்பவற்றைக் கழற்றிச் சிதையில் போட்டு நமஸ்காரம் செய்து திரும்பிப் பாராமல் நீர்க்கரையை அடைந்து நீராடி சுற்றத்தவரோடு வீட்டு வாயிலுக்கு வந்து வேப்பிலை கடித்து உமிழ்ந்தபின் கை கால் கழுவிப் பின் நீராடி வீட்டைச் சுத்தம் செய்யவும். தூய்மையாய்

தயாரித்த சோறுகறி முதலியவற்றை இறந்தவருக்குப் படைத்து தீபமேற்றித் திருமுறை பாடிய பின்னர் உரிமைக்காரருடன் உணவை உண்ணவும். துடக்கு (ஞாதிகள்) அல்லாதோர் அங்கு உணவு உண்டால் அவ் ஆசௌசம் முடியும் வரையும் துடக்கு காக்க வேண்டும். அந்தியேட்டிவரை தினமும் இரவில் தீபம் ஏற்றி நீர் நிரம்பிய பாத்திரம் ஒன்றையும் வைத்தல் வேண்டும்.

மறுமை வாழ்க்கையை நோக்கியெழுந்த உயிர், நடுவழியில் நீர்வேட்கையால் மறுகாது நீர் அருந்தி ஆசை தணிந்து அமைதி பெறவேண்டும் என்ற நோக்குடன் நீர்க்குடம் உடைக்கப்படும் செய்கை நடைபெறுகிறது. கொள்ளி நெருப்பெடுத்துத் தலையிலிருந்து கால்வரை வைத்துவிட்டுத் திரும்பிப் பாராமல் வருவர். சிதைக்குப் பிள்ளை மூட்டிய நெருப்பின் ஒளி உயிர் தடுமாறாது பரலோகம் செல்ல ஒளிமிகுந்து வழிநடத்தும் என்ற நம்பிக்கையில் எழுந்ததே இச்சடங்கு என்பர். புதைப்பதாயின் மூன்றுமுறை சுற்றி வரும்போது முதுகுப்புறமாகக் கையால் மும்முறை மண்ணைத் தள்ளுவர. அதன் பின்னர் உப்பு மற்றும் மண் போட்டு மணலால் மூடிவிடுவர். உப்பு போடப்படுவதால் அது பிணத்தின் உடல் நீரை உறிஞ்சி எலும்புகளை விரைவில் உலர வைக்கும் எனவும் குப்பைகளைப் போடுவதால் பிணத்தின் வாடை வெளியில் பரவாதவாறு தடுக்கப்படுவதாகவும் அறியமுடிகிறது. எரிக்கும்போதும் புதைக்கும் போதும் பிணத்தின் கட்டுக்களை அவிழ்க்கிறார்கள். ஏனெனில் கட்டுக்களுடன் எரித்தாலோ புதைத்தாலோ அவரது ஆவி கட்டுககளுடனே அலையும் என்ற நம்பிக்கை மக்களிடையே நிலவுகிறது. மேற்கூறிய காடிபோடுதல் நீர்க்கடன், தீக்கடன் முதலான ஈமச்சடங்குகளைச் செய்யவே பெரிதும் குழந்தைபபேறு விரும்பப்பட்டு வருவதாக உணர முடிகிறது. நம்பிக்கையே மக்களிடமும் இடங்கொண்டிருத்தலைக் காணலாம்.

"கொள்ளிக்கு மைந்தனில்லே குடமுடைக்கப் புள்ளையில்லே
தீக்கடனும் நீர்க்கடனும் செய்து வைக்கப் பாலனில்லே"

என்ற பாடல் தாயின் வேட்கை முழுவதையும் வெளிப்படுத்துவதாயுள்ளது. இப்பாடல் இறுதிக்கடன் ஆற்றும் சடங்குகள் அனைத்தையும் ஆண்மகனே செய்வதாகப் படம் பிடித்துக் காட்டுவது போன்று அமைந்துள்ளது. இறப்பு அன்று உணவு உள்ளூரிலுள்ள உறவுமுறையாரைச் சாரும்.

இறப்பு நிகழ்ந்த அன்றிலிருந்து கருமாதி முடியும் நாள்வரை இறந்தவரின் வீட்டாரும் அவர் சார்ந்த உடன் பங்காளி வீட்டாரும் தலைக்கு எண்ணெயிடுவதில்லை. கருமாதிச சடங்கு முடியும்வரை இறந்த இடத்தில் நிறை செம்பு நீரையும் ஏற்றிய

விளக்கினையும் வைப்பர். சில இடங்களில் இறந்தவரது பொருட்களையும் வைப்பது வழக்கம். கோடியின்போது கொண்டு வந்த எண்ணெய் முழுவதையும் இந்தவரை வைத்திருந்த இடத்தில் விளக்கேற்றியே தீர்த்துவிடுவர். இறந்தவர்கள் சோதி வடிவாக விளங்கும் இறைவனுடன் ஒன்றிவிட்டார்கள் என்பதை உணர்த்தவே விளக்கேற்றி வைக்கப்படுகிறது என்ற நம்பிக்கை நிலவுகிறது. கருமாதி முடியும் நாள்வரை இறந்தவரது ஆன்மா வந்து போய்க்கொண்டிருக்கும். அவ்வாறு வரும்போது தாகம் ஏற்படின் தண்ணீரைக் குடித்து தாகத்தைத் தீர்த்துக் கொள்ளும் என்ற நம்பிக்கைகள் நிலவுகின்றன. மறுநாள் காலையில் செம்பு நீரைப் பச்சை மரத்தின்மேல் ஊற்றுகிறார்கள். சுமங்கலி இறந்தால் மலரையும் வைக்கின்றனர். அதனை மறுநாள் எடுத்து கூரைமேல் வீசுகிறார்கள். இவைகள் அசுத்தமான இடத்திலோ காலடியில் மிதிபட்டாலோ தீட்டாகி விடுகின்றன என நம்புகின்றனர்.

## பால் தெளித்தல்

புதைத்த அல்லது எரித்த மறுநாள் செய்யும் சடங்கு 'பால்தெளி' ஆகும். இதனைக் 'காடாற்றுதல்' அல்லது 'காடேற்றுதல்' என்றும் கூறுவர். ஈமச்சடங்கன்று நிகழ்ந்த எரித்தல் செய்கையால் உண்டான சுடுகாட்டுச் சாம்பலில் நீரை ஊற்றி அதன் வெப்பத்தினை ஆற்றுதல் என்னும் பொருளுடையதாக இதனைக் கொள்ள இடமுண்டு. பால், வெற்றிலை, பாக்கு, பழம், நெற்பொரி, ரொட்டி, கோது நீக்காத உழுந்தில் செய்தவடை, இளநீர், தேங்காய், சூடம் போன்ற பொருட்களை ஒருகூடையில் வைத்து வெள்ளைத்துணியால் மூடிக் கொள்ளி வைத்தவர் தன்தலையில் சுமந்து கொள்ள ஆடவர் அனைவரும் அவரை இடுகாட்டிற்கு அழைத்துச சென்று இச்சடங்கினைச் செய்விப்பர்.

புதைத்தால் அன்றே பால் தெளித்தலும் உண்டு. இதனை 'உடன்பால் தெளித்தல்' என்பர். மண்ணால் மூடிய மேடையின்மீது பால் தெளிப்பர் இளநீரைத் துளைசெய்து தலைமாட்டில் வைப்பர்.

எரித்தால் சிதையைப் பிரித்து எஞ்சியுள்ள எலும்புகளைப் பொறுக்கியெடுத்து முழு உருவம் அமைத்து அதற்குப் பால், பன்னீர், எலுமிச்சம் பழச்சாறு ஆகியவற்றால் அபிடேகம் செய்வர். தேங்காய் உடைத்துத் தூபதீபங்காட்டி வழிபடுவர். இதனை

"தங்கச் சுடுகாடு தணல் பத்தி வேகையிலே

தங்க விசிறி கொண்டு தனிச் செம்பு தீர்த்தங் கொண்டு
தணலமத்த வந்தேன்"

என லேனா தமிழ்வாணன் பதிப்பித்த நூலில் காணப்படுகிறது. பின் எலும்புகளை எடுத்து ஒரு மட்கலயத்தில் வைத்து ஆற்றில் அல்லது நீர் நிலையில் விட்டுவிட்டுத் திரும்பிப்பாராமல் வீடு அடைவர். வளமையைக் குறிக்கும் தன்மையதான பாலைத் தெளிப்பதால் இறந்தவருக்கு எரித்ததால் ஏற்பட்ட வெம்மை தணிவதோடு அவரது குடும்பத்தார் தழைத்து வாழ்வார்கள் என்றும் நம்புகின்றனர்.

'பால்தெளிச்' சடங்கில் பெண்களின் பங்கு மிகக் குறைவு. ஆடவர்கள் இடுகாடு சென்றவுடன் ஒருவரையொருவர் பிடித்துக்கொண்டு அழுது தங்கள் துயரத்தைப் பகிர்ந்து கொள்வர். பெண்கள் பால்தெளி சடங்கினை வீட்டில் செய்கின்றனர். இறந்தவரின் உயிர் பிரிந்த அல்லது சடலத்தை வைத்திருந்த இடத்தில் ஒரு செம்பில் பாலை வைத்திருப்பர். அதிலொரு கரண்டியை இட்டு ஒவ்வொருவரும் மூன்றுமுறை எடுத்து அச்செம்பிலேயே ஊற்றுவர். பின் அப்பாலை எடுத்துச் சென்று நீர் நிலையில் ஊற்றிவிடுவர். பெண்கள் அழுதுவிட்டு ஆடவர்கள் வருவதற்குள் நீராடி விடுவர். அன்று இறந்தவர் வீட்டில் எளிய முறையில் விருந்து நடைபெறும்.

## தனிஷ்டா பஞ்சமி சாந்தி

அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்தரட்டாதி, ரேவதி ஆகிய ஐந்து நட்சத்திரங்களில் இறந்தால் தோசமுண்டு. இதற்குச் சாந்தி செய்ய வேண்டும்.

வீட்டில் பூர்ண கும்பம், தண்ணீர், பசு, தீபம் இவற்றை மூன்று நாள், இரண்டு நாள் அல்லது ஒரு நாளாவது வைக்கவேண்டும். நீற்றுப் பூசணிக்காய் கட்டுதல், வீட்டில் உள்ளவர்கள் கையில் நூல் கட்டுதல் முதலியன நடைமுறையில் உள்ள வழக்கம். பிரேதத்தை சுடலைக்கு எடுத்துச் செல்லும்போது கமுகம்பிள்ளை ஒன்றும் பிரேதத்தோடு கொண்டு செல்லும் வழக்கமும் உண்டு. சனிக்கிழமை பிரேத தகனம் செய்ய நேரிட்டால் பிரேதத்துடன் கமுகம்பிள்ளை எடுத்துச்செல்வர். முட்டை, கோழிக்குஞ்சு ஆகியனவும் பிரேதப் பெட்டியில் போட்டு அனுப்புவார்கள்.

சுப நட்சத்திர சுப வாரத்தில் பஞ்சமி சாந்தி செய்யப்படும். அல்லது அந்தியேட்டி அன்று இரவு சாந்தி செய்யலாம்.

ஆசாரியர் நித்திய கருமம் முடிந்தபின் புண்ணியாகவாசனம் செய்வார். பின்

விக்கினேஸ்வரரைப் பூசித்து யமன் பிரதிமையைத் தானம் செய்க.

எருமை வாகனத்துடன் யமனை வெள்ளி அல்லது செப்புத் தகட்டில் வரைந்து சந்தனம், புஷ்பங்கள் சாத்தி சோடச பூஜை செய்ய வேண்டும். பசு, த்ருணம், சலம் இவைகளை வைத்து இறந்த நட்சத்திர சாந்தி தானங்களைச் செய்க. அவிட்டத்திற்கு வெங்கலப் பாத்திரமும், சதயத்திற்கு எள்ளும், பூரட்டாதிக்கு வஸ்திரமும் (ஆடை), உத்தரட்டாதிக்கு வெல்லமும், ரேவதிக்கு வெள்ளியும் தானம் செய்க.

வீட்டின் நடுவில் இரண்டுபடி நெல் பரவி ஒருபடி அரிசியும் அரைப்படி எள்ளும் காற்படி உழுந்தும் பரவி அதன்மேல் கும்பம் வைத்து அதில் லக்ஷ்மியை ஆவாகனஞ் செய்து லக்ஷ்மி பிரதிமையை வைத்துப் பூசித்து கிழக்கு முதல் ஈசானம்வரை திக்கு பாலகர்களைக் கலசங்களிற் பூசித்து நைவேத்திய தூபதீபம் கொடுத்து அவரவர் மந்திரங்களை ஆயிரம் அல்லது ஐந்நூறாவது செபித்து கும்பத்திற்கு மேற்கே அக்கினி உண்டாக்கி அதில் லக்ஷ்மிக்கும் திக்குப் பாலகர்களுக்கு ஆகுதி செய்து நவக்கிரக ஓமம் செய்து கிரியை செய்தவரை கிழக்கு முகமாக இருத்தி கும்பநீரால் அபிஷேகம் செய்து பஞ்சகௌவியம பருகக் கொடுக்கவும். பின் தானம் கொடுத்து ஆசாரியரைப் பூஜை செய்யவும். இது அபரக்கிரியா விதி வியாக்கியானத்திற் கூறப்பட்டது. இக்காலத்தில் நடைமுறையில் உள்ள சாந்தி வருமாறு.

அந்தியேட்டி அன்று இரவு வீட்டு முற்றத்தில் பந்தலிட்டு வெள்ளை கட்டி மாவிலை தோரணத்தால் அலங்கரித்து நிலத்தை மெழுகி சாந்தியை ஆரம்பிப்பர்.

விக்னேஸ்வரர் பூஜை புண்ணியாக வாசனம், பஞ்சகௌவிய பூஜை முடித்து முறத்தில் (சுளகு) அரிசிமா, மஞ்சள்மா, கரிமா, இலை (பச்சை) மா, செங்கல் (சிவப்பு) மா இவற்றால் சிதாஸ்தான பதம் வரைந்து இதில் பஞ்ச தத்துவங்களையும் பூசித்து அரிசிமா அல்லது தர்ப்பையினால் செய்த புத்தளிகையை (உருவம்) வைத்து இறந்த நட்சத்திரத்திற்குரிய மந்திரங்களால் பூசித்து அக்கினி உண்டாக்கி ஆகுதி, பலி, பூர்ணாகுதி கொடுத்து நிறைவு செய்து முறத்துடன் புத்தளிகையைச் சுடலைக்குக் கொண்டு சென்று தகனம் செய்து சாம்பலை நீர் நிலைகளில் கரைத்து வீட்டிற்கு வந்து நீராடி அனுட்டானம் முடித்தபின் சிவன், வர்த்தனி, லக்ஷ்மி நவக்கிரக தேவர்களையும் பூசித்து கிரியை செய்தவருக்கு சிவன் வர்த்தனி கும்பநீரால் அபிஷேகம் செய்ய வேண்டும். அதன்பின் தானம் கொடுக்கவும்.

வெண்கலமாயின் ஐந்து பலமும், எள் எனின் இரண்டு படியும், வஸ்திரம் எனின்

இரண்டும், வெல்லம் ஆயின் பத்து பலமும், வெள்ளி எனின் ஒரு பலமும் தானம் செய்யவும். அவிட்டத்திற்கு ஆறு மாதம், சதயத்திற்கு மூன்று மாதம், பூரட்டாதிக்கு ஒன்றரை மாதம், உத்தரட்டாதிக்கு ஒரு மாதம், ரேவதிக்கு பதினைந்து நாட்கள் தோசமாகும்.

## எட்டுக் கும்பிடுதல்

இறந்த நாளையடுத்து ஏழாம் நாள் அல்லது ஐந்தாம் நாளில் நடைபெறும் சடங்கிற்கு 'எட்டுக் கும்பிடுதல்' என்று பெயர். இதனை 'எட்டுப் படையல்' என்றும் 'எட்டாஞ் சடங்கு' என்றும் கூறுவர்.

நாற்காலி வைத்து அதற்குத் திருநீற்றுப்பட்டையிட்டு அவ்விருக்கையின்மேல் இறந்தவர் பயன்படுத்திய ஆடைகளை மனித உருவம்போல் மடித்து வைத்து இறந்தவர் புகைப்படம் வைத்து அதன்முன் பலகாரங்கள் விரும்பிய உணவுகளை செய்து வைத்து அவர் பயன்படுத்திய அணிகள் ஆகியவற்றை வைப்பர். பின்பு தூபதீபங்காட்டித் தேங்காய் உடைத்து அந்நீரால் நீர் அளாவுவர். இறந்தவரை நினைத்து வழிபட்ட பின்பு நிகழ்ச்சிக்கு வந்தவர்களுக்கு அவற்றை வழங்குவர்.

அனறு அனைவரும் எண்ணெய் தேய்த்துக் குளிப்பர். இறந்தவரின் குடும்பத்தாரும் அவருடைய உறவினர் வீட்டாரும் இறப்புக்குப்பிறகு அன்றுதான் முதன் முதலாகத் தலைக்கு எண்ணெய் வைப்பர். அன்று ஆடு வெட்டிக் கறி சமைத்து இறந்தவரின் உறவுமுறை வீட்டார், இறந்தவர் வீட்டைச் சார்ந்தோர்க்கும் அவர்களின் உறவினருக்கும் விருந்து படைப்பர். அன்றுதான் இறப்பிற்குப்பின்பு முதன் முதலாக இறைச்சியுண்பர்.

இப்படையல் நிகழ்ச்சியினைப்பற்றி அனைவருக்கும் அல்லாமல் முக்கியமான உறவினர்களுக்கு மட்டுமே தெரிவிப்பர். படையற் பொருள்களை வந்தவர்களுக்கு வழங்குவர். இது போன்றே தீபாவளி, பொங்கல் வரும் மூன்று நாள் முன்பாகப் படைப்பர். எட்டுக் கும்பிடுதலின்போது வழிபாட்டில் வைத்த இறந்தவரின் ஆடைகளை ஒவ்வொரு படையலின்போதும் வைத்துப் படைப்பர்.

ஓராண்டு நிறைவடைவதற்குள் இறந்தவர் வீட்டில் எந்தவொரு மங்கல நிகழ்சிகளும் நடைபெறாது விதிவிலககாகச் சிலநேரங்களில் நடைபெறுதலுமுண்டு. ஓராண்டு வரை இறப்புத்தீட்டு அவர்களைத் தொடர்ந்திருப்பதாக நம்புகின்றனர்.

## அந்தியேஷ்டி

அந்தியேஷ்டி என்பது இறுதியாகச் செய்யப்படும் யாகம் எனப் பொருள்படும். அந்தியேஷ்டியினால் சமய ஆசாரம், அனுட்டானத்தில் ஏற்பட்ட குறைகள் நிவர்த்தி அடையும்.

அந்தியேஷ்டி - சமய அந்தியேஷ்டி, விசேட அந்தியேஷ்டி, நிர்வாண அந்தியேஷ்டி என மூன்று வகைப்படும். இது சமய, விசேட, நிர்வாண தீட்சை உடையவர்களுக்கு அவர்கள் பெற்ற தீட்சை வகையில் செய்யப்படும். விசேட, நிர்வாண அந்தியேஷ்டியும் சைவ ஆசாரம் உடைய புலால் உண்ணாத சமயதீட்சை உடைய சைவர்களுக்கும் செய்யப்படும் சமய அந்தியேஷ்டியும் பிரேதத்தில் சுடலையில் செய்யப்படும். ஏனையோருக்குச் செய்யப்படும் சமய அந்தியேஷ்டி துடக்கு முடிவில் 31ஆம் நாளில் செய்யப்படும். இதை இக்காலத்தில் தர்ப்பை சுடுதல் என்பர். மகன் தவிர்ந்த ஏனையோர் கடமை (கொள்ளி வைத்தல்) செய்தால் அந்தியேஷ்டி (தர்ப்பை சுடல்) நாள பார்த்துத்தான் செய்ய வேண்டும். நந்தை, பத்ரை, திரயோதசி தவிர்ந்த திதிகளும் செவ்வாய், வியாழன், வெள்ளி தவிர்ந்த வார லக்கினங்களும் திரியாத நட்சத்திரம் தவிர்ந்த ஏனைய நட்சத்திரங்களிலும் பாபக்கிரகம் பலமுண்டான சமயத்தில் இக்கருமம் செய்யலாம் (காலவிதானம்) (நந்தை - பிரதமை, ஷஷ்டி, ஏகாதசி, பத்ரை - துதியை, ஸப்தமி, துவாதசி, திரிபாத நட்சத்திரம், கார்த்திகை, உத்தரம், உத்தராடம், புனர்பூசம், விசாகம், பூரட்டாதி) 26ஆம் நாளுக்கு மேல் 31ஆம் நாள் வரையில் அந்தியேஷ்டி செய்யலாம்.

சுடலை ஆற்றங்கரை, குளக்கரை, சமுத்திரக்கரை, வீடு (கிணற்றடி) ஆகிய இடங்கள் அந்தியேஷ்டி செய்வதற்கு உகந்த இடங்களாகும். ஒன்பது முழம் முதல் குறைந்த பட்சம் ஐந்து முழ நீள அகலங் கொண்ட மண்டபம் அமைத்தல் வேண்டும். இம்மண்டபத்திற்கு பதினாறு அல்லது பன்னிரண்டு அல்லது நாலு கால்கள் அமைய வேண்டும். மேலே வெள்ளை கட்டி விதானம், தோரணம், பூமாலைகளால் அலங்கரித்து நான்கு திசைகளிலும் வாயில் அமைத்து தெற்கில் பிரதான வாயில் அமைத்து சாணத்தினால் நிலத்தை மெழுகி மண்டபத்தை ஒன்பது பதமாக்கவும்.

நடுப்பதத்தில் ஓமகுண்டமும், வடமேற்கில் சிவகும்பமும், வடகிழக்கில் வர்த்தனி (பாசுபதாஸ்திர) கும்பமும், தென்மேற்கின் பஞ்சகௌவிய மேடையும், தென்கிழக்கில் சிதாவஸ்து தானம் (பிரேத தகன இடம்) ஆகியவற்றையும் சுற்று வேதிலையில் (மண்டபத்தின் சுற்றுப்புறத்தில்) தசாயுத கும்பங்களையும் அமைத்துக் கொள்ளவும்.

சிதாவஸ்து தானத்தை வடக்குத் தெற்காக நீண்ட சதுரமாக்கி இருபத்தைந்து பதமாகப் பிரித்து நடுப்பதம் ஐந்திலும் மஞ்சள் மாவும், தென்மேற்கில் நாலு பதத்தில் வெள்ளை மாவும், தென் கிழக்கில் நாலு பதத்தில் சிவப்பு மாவும், வடகிழக்கில் நாலுபதத்தில் கறுப்பு மாவும், வடமேற்கில் நாலு பதத்தில் பச்சை மாவும், வடக்கில் உள்ள ஒரு பதத்தில் சிவப்பு மாவும், மேற்கில் உள்ள ஒரு பதத்தில் வெள்ளை மாவும், தெற்கில் உள்ள ஒரு பதத்தில் கறுப்பு மாவும், கிழக்கில் உள்ள ஒரு பதத்தில் மஞ்சள் மாவும் இட்டுக் கொள்ளவும்.

புத்தளிகை (பிரேதம் போலச் செய்யும் தருப்பை) முப்பத்தாறு தர்ப்பைகளால் முறுக்கி இடப்பக்கமாக முடிந்து ஐவைந்து தர்ப்பைகளால் கைகளும் பதின்மூன்று தர்ப்பைகளாகப் பிரித்து கால்களையும் ஆக்க வேண்டும்.

ஆசாரியார் நீராடிச் சந்தியாவந்தனம் முடித்து தெற்கு வாயிலால் மண்டபத்துட் புகுந்து சிவகும்ப வேதிகைக்குத் தெற்கே வடக்கு நோக்கி இருந்து கிரியை செய்பவருககுத் திருநீறு கொடுத்து சங்கற்பம் செய்து கொண்டு சளீகரணம், பூதசுத்தி, மந்திரசுத்தி, அந்தர்யாகம், சிவகஸ்தம் செய்து சிவோகம் பாவனை முடித்து ஞானகடக தாரணம் செய்தல் வேண்டும். பஞ்சகௌவிய பூசை முடித்து யாகமண்டபத்தையும் கிரியை செய்தவரையும் புத்தளிகையையும் பஞ்சகௌவியத்தால் (புரொட்சித்தல்) தெளித்தல் வேண்டும். சூர்ணோற்சவம் செய்து சுண்ணப்பொடி சாத்திப் புத்தளிகைக்கு அபிடேகம் செய்ய வேண்டும். பதினெட்டு சமஸ்காரங்களையும் மனத்தினாலே செய்து நெற்பொரி முதலியவற்றை மண்டபத்தில் தூவி மிகுதியை ஈசானத்தில் பாசுபதாஸ்திர வர்த்தளி ஆசனத்தில் இடவும்.

## சிதாவஸ்து பூஜை

நடுப்பதம் ஐந்திலும் பிருதுவி தத்துவத்தையும் பிரம்மாவையும் தென்மேற்கு மூலையில் நான்கு பதத்திலும் அப்பு தத்துவத்தையும் விஷ்ணுவையும் தென்கிழக்கு மூலையில் நான்கு பதத்திலும் தேயு தத்துவத்தையும் உருத்திரனையும் வடமேற்கு மூலையில் நான்கு பதத்திலும் வாயு தத்துவத்தையும் மகேஸ்வரனையும் வடகிழக்கு மூலையில் ஆகாச தத்துவத்தையும் சதாசிவனையும் வடக்கில் உள்ள ஒரு பதத்தில் குபேரனையும் மேற்கில் உள்ள ஒரு பதத்தில் வருணனையும் தெற்கில் உள்ள ஒரு பதத்தில் யமனையும் கிழக்கில் உள்ள ஒரு பதத்தில் இந்திரனையும் பூசித்து பழம், தாம்பூலம்

நிவேதித்து நீராஞ்சனம் செய்தல் வேண்டும்

வர்த்தனி பூஜை செய்து பாசுபதாஸ்திர பூஜை செய்து ஞானவாளை ஒப்புக் கொடுத்து யாகத்தைக் காத்து ரட்சிக்கும்படி வேண்டியபின தசாயுத பூஜை செய்ய வேண்டும். வட கிழக்குத் திசை முதல் கிழக்குத் திசை வரையுள்ள எட்டுக் கும்பத்திலும் சூலம், கதை, துவசம், பாசம், கட்கம், தண்டு, சக்தி, வச்சிரம் ஆகியவற்றையும வடகிழக்கில் தெற்கில் உள்ள கும்பத்தில் பத்மத்தையும் தென்மேற்கில் வடக்கே உள்ள கும்பத்தில் சக்கரத்தையும் பூசித்து தசாயுத தேவர்களிடம் யாகம் முடியும்வரை பாதுகாக்க வேண்டும் என சிவாஞ்சையைத் தெரிவித்தல் வேண்டும். பின்னர் சிவகும்ப பூஜை, சிவாக்கினி காரியம், பிராயச் சித்த செபம், நாடீசந்தானம், மிருதக தீட்சை செய்து சிதாவாஸ்து தானத்தில் பூசித்த ஐவகை மாவையும் இட்டு அதன்மேல் புத்தளிகையை வைத்து வாய்க்கரிசியிட்டு கொள்ளி வைத்துக் குடம் உடைத்து தகனம் செய்த பின்னர் காடாற்றி புத்தளிகைச் சாம்பலை ஒரு பாத்திரத்தில் எடுத்துக் கொள்ளவும்.

## நக்னதானம்

இறந்தவருக்கு ஏற்படககூடிய பசி, தாகம், குளிர் (ஆடை இல்லாத குறை) போன்றவற்றை நீக்கும் பொருட்டுச் செய்யப்படும் தானம் நக்னதானம் ஆகும். குடும்பத்தவராய் உள்ள ஆசாரியாருக்கு அரிசி, வஸ்திரம் முதலியனவற்றைத் தான-மாகக் கொடுக்க வேண்டும். உயர்தீட்சை உடையோருக்குப் பிரேத தகனம் செய்த உடன் இத்தானம் கொடுக்கப்படும்.

## துர்மாணப் பிராயச் சித்தம்

இயற்கையாக உயிர் பிரியாது தன் உயிரைத்தானே மாய்த்துக்கொள்ளல் அல்லது வேறு ஏதுக்களால் உயிர்பிரிதல் துர்மரணம் எனப்படும். நீரில், நெருப்பில் பாய்தலால், நஞ்சு உண்டலால், பாம்பு கடித்தலால், ஆயுதங்களால், விலங்குகளால் ஏற்படும் இறப்பு துர்மரணமாகும்.

இது புத்திபூர்வம், அபுத்திபூர்வம் என இருவகைப்படும். புத்தி பூர்வம் தானேதான் உயிரைப் போக்கிக் கொள்வது. அபுத்திபூர்வம் எதிர்பாராத விதமாக உயிர்பிரிதல். அபுத்திபூர்வ துர்மரணத்தில் சாதாரண மரணம் போலவே கிரியையும் ஆசௌசமும் கொள்ளப்படும். இதில் தேகம் பின்னப்பட்டிருந்தால் ஆசௌச முடிவில் பிரதித்

தேகத்தில் (புத்தளிகையில்) புனர்தகனம் அந்தியேட்டி செய்ய வேண்டும். புத்திபூர்வ துர்மரணத்தில் சாதாரண அக்கினியில் தகனம் செய்து ஒருவருடம் அல்லது ஆறு மாதம் அல்லது மூன்று மாத முடிவில் இறந்த திதியில் தர்ப்பையால் செய்யப்பட்ட பிரதித் தேகத்தில் அந்தியேட்டி செய்து கொள்க. துர்மரணமடைந்தோர் பைசாச ரூபத்தில் அலைவர். ஆதலால் பைசாச புவனத்துக்கு அதிபதியாகிய வைரவருக்குச் சாந்தி செய்த பின்பே அந்தியேஷ்டி செய்யப்படும்.

## பாஷாணத் தாபனம்

இறந்தவருடைய ஆன்மாவைக் கல்லிலே பூசித்தல் பாஷாண பூஜை எனப்படும். (பாஷாணம் - கல்) இதில் செய்யப்படும் கிரியைகள் ஆன்மாவின் பசி, தாகம் நீங்கும் பொருட்டும் பிரேத வடிவம் நீங்கும் பொருட்டும் ஆன்மாவின் உணவு விருப்பங்களைப் பூர்த்தி செய்யும் பொருட்டுமேயாகும்.

இக்கிரியை வீட்டில் மண்டபம் அமைத்து விரிவாகச் செய்யலாம். பிரேதத்தில் அந்தியேட்டி செய்பவர்கள் வீட்டிலே பாஷாணத்தாபனம் செய்து விரிவாக பூஜை நிகழ்த்துவர். இக்காலத்தில் தர்ப்பை சுடுதல் நிறைவெய்தியதும் அந்தியேட்டி மடத்திலேயே இக்கிரியை நிகழ்கிறது.

மண்டபத்தில் வேதிகை அமைத்து வேதிகையில் வடக்கு முகமாக ஒரு கும்பம் வைத்து அதில் இறந்தவர் தீட்சைக்கு ஏற்றதுபோல உருத்திரர், ஈசுவரர், சதாசிவர் என்பவரில் ஏற்றவரைப் பூசித்தல் வேண்டும். ஒரு பாத்திரத்திலே கல்லினைக் கூர்ச்சங்கட்டி வடக்கு முகமாக வைத்து அதில் இறந்தவருடைய ஆன்மாவை ஆவாகனம் பண்ணி எண்ணெய், அரிமா முதலான அபிடேகத் திரவியங்களால் அபிடேகம் செய்து, வஸ்திரம் சாத்தி, பூஜை தர்ப்பணம் செய்தல் வேண்டும். தர்ப்பணம் வாசோதகம், திலோதகம், குசோதகம் என மூன்று வகையுண்டு. கொடிச் சீலையோடு சேர்த்துத் தர்ப்பணம் செய்வது வாசோதகம். எள்ளுடன் சேர்த்து செய்வது திலோதகம், தரப்பையுடன் சேர்த்து செய்வது குசோதகம். தர்ப்பணம் முதல்நாள் மூன்றும் இரண்டாம் நாள் நான்கும் என்ற வகையில் ஆசௌச முடிவுநாள் வரை செய்தல் வேண்டும். முப்பதுநாள் ஆசௌசிகள் 525 தர்ப்பணம் செய்தல் வேண்டும். நாளுக்கு ஒன்றாக ஆசௌசக் கணக்கில் பிண்டம் இடல் வேண்டும்.

நவ சிராத்தம், ஏகோத்தர விருத்தி, தர்ப்பணம், சங்கிதா, சிராத்ததானம் என்பன முறைப்படி செய்தல் வேண்டும்.

நவ சிராத்தம் - இது முதல்நாள் தொடங்கி ஒற்றித்த நாளில் செய்யப்படுவது. ஒழுக்கமுள்ள அந்தணர் ஒருவரை அழைத்து இறந்தவருடைய ஆன்மா நற்கதியடைய வேண்டித் தானம் கொடுத்து அவரிடம் தான பல தீர்த்தத்தை வாங்கிப் பாஷாணத்தின் மீது விடுவதன் மூலம் இறந்த ஆன்மாவிற்கு பிரேதத்தன்மை நீங்கி நற்கதி கிடைக்கும்.

சங்கிதா சிராத்தம் - பதினொரு மந்திரங்களில் நேத்திரம் ஒழிந்த பத்து மந்திரங்களை பத்து சீலமுள்ள அந்தணர்களில் ஆவாகித்து அவர்களுக்கு செய்யும் தானமாகும். இதனால் தீட்சையின்பின் ஏற்பட்ட ஆசார அனுட்டானக் குறைகள் நீங்கும். உருத்திரபலி இட்டு அதன்பின் பிரபூத பலி எனப்படும் பேருணவு படைத்து தீபாராதனை தோத்திரம் செய்தல் வேண்டும். இறந்தவர் மேல் பாடப்பட்ட சரமகவி (கல்வெட்டு) பாடி சுற்றத்தவர் பூவும் நீரும் இட்டு அஞ்சலி செலுத்தல் வேண்டும்.

கல்லிலே பூசித்த ஆன்மாவைக் கும்பமூர்த்தியிடத்தும் கும்ப மூர்த்தியை அதற்குரிய இடத்திலும் ஒடுக்கி கும்பம், கல், பிண்டம், சாம்பல் முதலியவற்றை வாத்திய ஒலியுடன் சமுத்திரம் முதலான நீர்நிலைகளில் விடுக.

நீர்நிலையிலே மார்பளவு தண்ணீரில் வடக்கு முகமாக நின்று பிண்டத்தை முதலிலும் கும்பத்தை அடுத்தும் பாஷாணத்தைப் பின்னருமாக விட வேண்டும். நீராடிவிட்டு வீட்டிற்கு வரவேண்டும்.

வீட்டு வாசலில் வேப்பிலையைத் தின்று துப்பி ஆசமனம் செய்து அக்கினி, தண்ணீர், கோமயம், வெண்கடுகு இவைகளைத் தொட்டு உலக்கையைக் கடந்து கால்கை கழுவி வீட்டினுட் செல்லவும்.

இதுவரை கூறிய கிரியைகள் சைவக்குருக்கள் செய்வதும் மேற்பட்ட வீட்டுக்கிரியைகளைப் பிராமணக் குருக்கள்மாரும் செய்வதும் நடைமுறையில் உண்டு.

## துடக்குக் கழிவு

எமக்கு ஆசௌசம் முப்பது இரவுகள் முப்பத்தோராம் நாட்காலையில்தான் துடக்குக் கழிவு நிகழ வேண்டும். சைவ போசனமுடையவர்கள் வேறு மாமிசம் உண்பவருடன் கலப்பின்றி இருந்தால் பதினாறாம் நாளில் ஆசௌசம் நீங்கும்.

அந்தியேட்டி செய்பவர்கள் வீட்டைவிட்டுப் புறப்பட்டுச் சென்ற பின்னர் வீட்டைக் கழுவிச் சுத்தம் செய்து அனைவரும் நீராடி பிராமணக் குருக்களைக் கொண்டு புண்ணியாகவாசனம் செய்து ஆசௌசம் நீக்கலாம். இதன் பின்னர்தான் பாஷாணப் (கல்லடி) படையலுக்கு உணவு தயாரித்தல் வேண்டும். ஆசௌசம் நீங்கிய மறுநாளில் ஏனைய கிரியைகள் செய்யலாம்.

## வீட்டுக் கிரியை

வீட்டு முற்றத்தில் மெழுகி, பூரணகும்பம் (நிறைகுடம்) வைத்து, தீபம் ஏற்றி, பிள்ளையார் பிடித்து வைத்து, வாயிலில் மாவிலை கட்டவும். வீட்டுக்கிரியைகளில் முதலில் சங்கல்பம் செய்து விக்னேஸ்வர பூஜை, தீபதேவி பூஜை, பஞ்சகௌவிய பூஜை, வருண கும்ப பூஜை என்பன நிறைவேறியபின் கிரியை செய்தவரிற்கு பஞ்சகௌவியம் பருகக் கொடுக்கப்படும்.

## அனுஞ்சை

ஒரு வாழை இலையில் மூன்று தர்ப்பை, பவித்திரம், எள்ளு, தாம்பூலம், உபவீதம், காசு என்பனவற்றை கிரியை செய்தவர் தலையில் வைத்து இடப்புறமாக மூன்று முறை சுற்றி இன்ன வருடம், அயனம், ருது, மாதம், பட்சம், நட்சத்திரம், திதி, வாரம் கூடிய சுபதினத்திலே இன்னாருக்கு சிரார்த்தம் செய்கிறேன், அதற்கு அதிகாரம் கொடுக்க வேண்டும் என்று குருவிடம் வேண்ட அவர் அதிகாரம் தந்தோம் என்று கட்டைத் தர்ப்பையைக் கிரியை செய்தவரிடம் கொடுக்க அதை அவர் இடுப்பில் செருகிக் கொள்வார். பின்னர் வலதுகை மோதிர விரலில் பவித்திரத்தையும் வலத்தோளில் உபவீதத்தையும் அணிந்து கொள்ளவும்.

## சூரிய பூசை

சிவப்பு நிறப் பூவும் நீரும் கொண்டு மூன்று முறை ஆத்ம பிரதட்சணம் செய்து சூரிய மூர்த்தியை வணங்கிச் செய்யப்போகும் சிரார்த்தத்திற்குச் சாட்சியாக இருந்து அருள வேண்டுமெனப் பிரார்த்தித்து முற்றத்தில் வைக்கப்பட்ட கும்பத்தில் பூவையும் நீரையும் போட்டு வழிபடவும்.

தந்தைக்கு அலலது தாய்க்கு இடபதானம், ஏகோத்திட்டம், பஞ்சதச (பதினைந்து) மாசியம், சோதகும்ப சிரார்த்தம், சபிண்டீகரணம் என்பன செய்யப்போகிறேன் என்று சங்கற்பம் பணணிக் கொள்ளவும்.

## இடப தானம்

இறந்தவருடைய தான தருமங்களின் பலனை தருமத்தின் வடிவாயுள்ள இடபத்தின் மூலமாக சிவபெருமானிடம் சேர்க்கும் பொருட்டு இடபதானம் செய்யப்படும். இடபம் (ஆண் மாடு) தானம் செய்ய வசதிப்படாத இடத்து ஒரு தாம்பாளத்தில்

அரிசியைப் பரப்பி அதில் இடபத்தின் வடிவை எழுதி அதன்மேல் தேங்காய் வைத்து கிரியை செய்தவர் அத்தாம்பாளத்தை நாலு திசையிலும் இழுத்து உரிய மந்திரங்களைக் கூறித் தட்சணையுடன் அதை ஓர் அந்தணருக்குத் தானமாகக் கொடுக்கவும்

## ஏகோத்திட்டம்

இது இறந்தவர் ஒருவரை மட்டும் குறித்துச் செய்யப்படும் தானமாகும். அந்தணர் ஒருவரை அழைத்து மேற்கு முகமாக ஆசனத்தில் இருத்தி அவருக்கு ஸ்நானத்திற்கு வேண்டிய நல்லெண்ணெய், அரப்பு, எலுமிச்சம்பழம் கொடுத்து நீராடி தாகப் பாவனை செய்து வேட்டி, சால்வை, சந்தனம், பூ என்பனவற்றைச் சாத்தி அரிசி, மரக்கறி என்பனவற்றைக் கொடுத்துப் பூசிக்கவும்.

தரையைச் சுத்தம் செய்து வாழையிலை போட்டு ஒரு தருப்பையைத் தெற்கே நுனி இருக்கும் வண்ணம் வைத்து ஒரு பிண்டம் இடவும். பச்சை அரிசிமா, உழுந்துமா, எள், பால், தயிர், நெய், தேன், வாழைப்பழம் ஆகிய எட்டு பொருட்கள் சேர்த்து உருட்டிப் பிண்டம் செய்யப்படும். கிரியை செய்தவர் தெற்கு முகமாக இடது முழந்தாளையும் இடது கையையும் ஊன்றியிருந்து கைமாறிய பிண்டம் இடவும். சந்தனம், பூ சாத்தி வெற்றிலை, பாக்கு, பழம், இளநீர் நைவேத்தியம் நிவேதித்து தர்ப்பணம் செய்து நமஸ்காரம் செய்து கொண்டு தமது சக்திக்கு ஏற்றவாறு தானம் கொடுக்கவும். இத்தானத்தினால் ஆன்மா உலக வாழ்வில் ஓரளவு திருப்தியடையும். இதில் இருபத்திநாலு தானங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அவையாவன பவித்திரம், பூணூல், கமண்டலம், உருத்திராக்கம், பாதுகை (மிதியடி), தண்டம், கௌபீனம், விபூதிப்பை, யோகபட்டம், குடை, குல்லாய், மேல்வஸ்திரம் (சால்வை), வஸ்திரம், பொன், மோதிரம், இரத்தினம், நெய், வெண்ணெய், பசு, பூமி, போசனத்திற்கு வேண்டிய பொருட்கள், சர்வதானியங்கள், சர்வ அலங்காரப் பொருட்கள், தாசீ தாசர்கள் என்பனவாம். ஏகோத்திட்டம் ஏற்ற குருவிற்குத் தானம் தட்சணைகளைக் கொடுத்து வழி அனுப்பி மஞ்சள் நீர் தெளித்து இடத்தைச் சுத்தம் செய்து கிரியை செய்தவர் கைகால் கழுவி அல்லது நீராடி வந்து பஞ்சகௌவியம் பருகிக் கொள்ளவும்.

## மாசியம்

இறந்த வருடத்தில் மாதந்தோறும் செய்யப்படும் சிரார்த்தமே மாசிகமாகும். இது மாதந்தோறும் இறந்த திதியில் செய்யப்படும். முதல் மாதத்திற்குரிய மாசிகம் ஏகோத்திட்டம் என்ற பெயரில் முதலில் செய்யப்பட்டது. இரண்டாம் மாதம் தொடக்கம் பதினொரு மாத மாசிகமும் ஊன மாசிகம், ஊனதிரிபட்ச மாசிகம், ஊனசாண் மாசிகம், ஊன ஆப்திக மாசிகமும் ஆகப் பதினைந்து மாசிகம் செய்தல் வேண்டும்.

**1. ஊனமாசிகம்**

இறந்தநாள் முதல் இருபத்தேழு நாளின்மேல் மூன்று நாட்களுட் செய்யப்படுவது.

**2. ஊனதிரிபட்ச மாசிகம்**

அவ்வண்ணம் நாற்பதாம் நாள் முதல் நாற்பத்தைந்தாம் நாளுக்கிடையில் செய்யப்படுவது.

**3. ஊனசாண் மாசிகம்**

மேற்கூறப்பட்டபடி நூற்று எழுபதாம் நாள் முதல் நூற்றெண்பதாம் நாட்களுக்கிடையில் செய்யப்படுவது.

**4. ஊன ஆப்திக மாசிகம்**

அவ்வாறே முந்நூற்றைம்பதாம் நாள் முதல் முந்நூற்றறுபத்தைந்தாம் நாட்களுக்கிடையில் செய்யப்படுவது.

மாதந்தோறும் செய்யும் பதினொரு மாசிகங்களும் இறந்த திதியில் செய்யப்படும். ஊன மாசிகங்கள் நான்கும் தோஷங்கள் இல்லாத நாளில் செய்ய வேண்டும். வெள்ளிக்கிழமையிலும் நந்தை, சதுர்த்தசி, அமாவாசை என்னும் திதிகளிலும் கார்த்திகை, ஆயிலியம், பூரம், கேட்டை, மூலம், பூரட்டாதி என்னும் நட்சத்திரங்களிலும் திரிபுஷ்கரயோகம், துவிபுஷ்கரயோகம் என்பவற்றிலும் ஊனமாசிகம் செய்தல் ஆகாது.

(துதியை, சப்தமி, துவாதசி என்னும் திதிகளும் கார்த்திகை, உத்தரம், உத்தராடம், புனர்பூசம், விசாகம், பூரட்டாதி என்னும் நட்சத்திரங்களும் ஞாயிறு, செவ்வாய், சனி என்னும் வாரங்களுமாகிய மூன்றும் கூடுவது திரிபுஷ்கரயோகம். இரண்டு கூடுவது துவிபுஷ்கரயோகம்)

பதினைந்து மாசிகங்களும் செய்ததன் மேல் வருட முடிவில்தான் சபிண்டீகரணம் செய்தல் வேண்டும். ஆயினும் கிரியை செய்தவரின் அசௌகரியங்களை உத்தேசித்து ஆசௌச முடிவில் பதினைந்து மாசிகங்களையும் செய்து முடிப்பர். இப்படிச் செய்தாலும் பின்னரும் உரிய காலத்தில் மாசிகங்களைச் செய்வது சிறந்ததாகும்.

## சோதகும்ப சிராத்தம்

இது நீர் நிரம்பிய பாத்திர (உதகம் - நீர்) தானமாகும். இறந்த ஆன்மாவின் தாகம் தீரும் பொருட்டு இறந்த நாள் முதல் வருடம் முந்நூற்றி அறுபத்தைந்து நாளிலும் இத்தானம் செய்யவேண்டும். இவ்வாறு செய்ய வசதி ஏற்படாததால் இப்போது சபிண்டீகரணத்தின்முன் சோதகும்பதானம் நடைபெறும்.

## சபிண்டீகரணம்

பிண்டங்களை ஒன்று சேர்த்தல் சபிண்டீகரணம் ஆகும். இதிலே பிதிர் வர்க்கத்திற்கு மூன்று பிண்டமும் மாத்ரு வர்க்கத்திற்கு மூன்று பிண்டமும் நிமித்தருக்கு (இறந்தவருக்கு) ஒரு பிண்டமும் இடப்படும். நிமித்த பிண்டத்தைப் பிதிர் பிண்டத்துடன் சேர்ப்பதால் இறந்த உயிர் பிரேதத்தன்மை நீங்கிப் பிதிர்த்தன்மையும் சிவலோகப் பேறும் அடையும். சபிண்டீகரணத்தின்மேற் செய்யும் சிரார்த்தங்களில் நிமித்த பிண்டம் இன்றி பிதிர்ப்பிண்டம் மூன்று இட்டுச் செய்ய வேண்டும்.

சபிண்டீகரணம் பார்வண விதானம், ஏகோத்திட்ட விதானம் என இருவகைப்படும். பார்வண விதானம் பிதிர்தேவர் மூவரைக் குறித்துச் செய்யப்படுவது. ஏகோத்திட்ட விதானம் குறித்த பிதிர், தேவர் ஒருவரைக் குறித்துச் செய்யப்படுவது.

தந்தை, தாய், தந்தையின் சகோதரன், அவன் மனைவி, பேரன், பேத்தி ஆகியோருக்குச் செய்யும் சபிண்டி பார்வண விதானமாய் அமையும். மனைவி, கணவன், சகோதரன், மகன், மகள், மாமன், மாமி ஆகியோருக்குச் செய்யும் சபிண்டி ஏகோத்திட்ட விதானமாய் அமையும். தந்தை தாயாருக்குச் சபிண்டி செய்யும்போது பேரன், பேத்தி உயிருடன் இருந்தால் ஏகோத்திட்ட விதானமாகச் செய்ய வேண்டும்.

வீட்டுக் கிரியையைப் பொதுவாகச் சபிண்டீகரணம் என்று சொல்லும் வழக்கு இப்போது உண்டு. ஏகோத்திட்டம், பதினைந்து மாசிகம், சோதகும்ப சிரார்த்தம் என்பனவற்றைச் செய்த பின்பே சபிண்டீகரணம் செய்ய வேண்டும். இது ஒரு வருட

முடிவில் செய்யத்தக்கது. எனினும் இடையில் ஏற்படும் வசதியீனங்களைக் கருதி ஆசௌசம் நீங்கிய மறுதினத்தில் செய்யலாம். இதிலே நாலு பகுதிகளுண்டு.

1. சிவனடியார் பொருட்டு இருவர் - நந்திதேவர், மகாகாளர்
2. பிதிர்த்தேவர் பொருட்டு மூவர் - கந்தர், கண்டர், கணாதீசர்
3. அதிதி அப்பியாகதர் இருவர் - முன் அறியப்படாதவர் அப்போது அங்கு வந்தவர்
4. நிமித்தர் - இறந்தவர் பொருட்டு ஒருவர்

இவ்வாறு எண்மர் அமர்த்தப்படுவர். எண்மர் கிடைக்காதபோது ஒவ்வொரு பகுதிக்கு ஒருவராக நால்வரையேனும் விசுவதேவருக்கு ஒருவர் பிதிர்தேவருக்கு ஒருவராக இருவரையேனும் அமர்த்தலாம். ஒருவரே அமையும்போது புயங்களில் விசுவதேவரையும், தோளுச்சியில் பிதிர்த்தேவர்களையும் பூசிக்கலாம்.

இவர்களைச் சகல உபசாரங்களும் செய்து வீட்டினுள் அழைத்து வந்து தர்ப்பை ஆசனத்தில் விசுவதேவர் அதிதி அப்பியாகதரைக் கிழக்கு முகமாகவும் பிதிர் தேவர்களை வடக்கு முகமாகவும் நிமித்தரை மேற்கு முகமாகவும் அமர்த்துக. அவர்கள்முன் பாத்திரங்களை வைத்து தேவ பாத்திரத்தில் நெல்லும் பிதிர் பாத்திரத்தில் எள்ளும் இட்டு பூசிக்கவும், பூணூலை வலமாக இட்டு விசுவதேவரையும் இடமாக இட்டுப் பிதிர்தேவரையும் பூசிக்க வேண்டும். நிமித்தரையும் பின் அதித அப்பியாகதரையும் பூசித்து வஸ்திரம், அரிசி, காய்கறி தானம், தட்சணை கொடுக்கவும். அவர்கள் முன்னிலையில் சாணத்தால் மெழுகி வாழையிலையில் தெற்கு நுனியாகத் தர்ப்பைகளை வைத்து எள்ளுச் சிதறிக் கிரியை செய்தவர் தெற்கு நோக்கி இடது முழந்தாள் இடதுகையை ஊன்றியிருந்து வடக்கிலிருந்து தெற்காக முதல் வரிசையில் பிதிர் வர்க்கத்திற்கு மூன்று பிண்டமும் இரண்டாவது வரிசையில் மாதுரு வர்க்கத்திற்கு மூன்று பிண்டமும் கிழக்கில் மூன்றாவது வரிசையில் நடுவில் இறந்தவர் (நிமித்தர்) குறித்து ஒரு பிண்டமும் இடுக. நிமித்த பிண்டம் சற்று நீண்டதாய் நுனி வளைந்து மற்றப் பிண்டங்களைத் தீண்டுவதாய் அமையும்.

பிண்டத்திற்கு மஞ்சள், சந்தனம், பூவும் சாத்தவும். இறந்தவர் ஆணாகில் வேட்டியும் பெண்ணாகில் சேலையும் பிண்டத்திற்குச் சாத்துக. பிண்டத்திற்கு மேற்கே அன்னம், கறிவகை, தயிர், பாயாசம், பலகாரம், பழவகை, வெற்றிலை, பாக்கு என்பவற்றைப் படைக்கவும். இளநீரை வெட்டித் திறந்து வைக்கவும். பின்னர் தூபதீபம் காட்டி வழிபாடு செய்யவும். கிரியை செய்தவரும் உறவினரும் பூவும் நீருமிட்டு

வழிபட்டபின் திருமுறைபாடி சரமகவி பாடித் தர்ப்பணம் செய்யவும். நிமித்த பிண்டத்தில் சாத்திய பூவை எடுத்துப் பிதிர்ப்பிண்டத்தில் சேர்க்கவும். இதனால் இறந்தவர் பிதிர்களுடன் சேர்ந்தார் எனக்கொள்ளப்படும். பின்னர் சகல பிதிர்தேவர்களையும் உத்வாசனம் செய்து பிண்டங்களை பசுவிற்குக் கொடுக்கவும் அல்லது சமுத்திரத்தில் விடவும்.

வடக்குத் தெற்காக மூன்று பாத்திரமும் கிழக்கில் ஒரு பாத்திரமும் வைத்து அவற்றுள் அர்க்கியம் (நீர, சந்தனம், பால், எள்ளு, தர்ப்பை நுனி, பூ) இட்டு மூன்று பாத்திரத்துள்ளும் பிதிர்த்தேவரையும் தனிப்பாத்திரத்தில் நிமித்தரையும் பூசித்து நிமித்தருக்குரிய பாத்திரத்தில் உள்ள அர்க்கிய சலத்தை பிதிர்தேவருக்குரிய மூன்று பாத்திரத்தில் உள்ள சலத்துடன் சேர்க்கும் நிகழ்வு அர்க்கிய சம்யோசனம் எனப்படும்.

பின்னர் குருவிற்கு தட்சணை கொடுத்து ஆசீர்வாதம் பெற்றபின் குரு கிரியை செய்தவருக்கு மஞ்சளால் திலகமிட்டு அதன்மேல் அட்சதையை வைத்து விடுவார். குருவை வீட்டு வாசல்வரை சென்று வழியனுப்பி உறவினர் நண்பருடன் உணவு உண்ணவும்.

## ஆப்திகம் (ஆட்டைத் திவசம்)

ஓர் ஆண்டு முடிவிலே செய்யப்படும் சிரார்த்தமாதலால் இது ஆட்டைத் திவசம் எனப்படும். இறந்த திதியில் செய்யும் இந்தச் சிரார்த்தத்துடன் இறந்தவரைக் குறிதது்ச் செய்யும் அபரக்கிரியைகள் நிறைவுறும்.

## வருட சிரார்த்தம்

சிரார்த்தமென்பது சிரத்தையுடன் செய்யப்படுவது எனப் பொருள் கொள்ளப்படும். இறந்துபோன முன்னோர் ஆத்மாவை கரையேற்றச செய்யும் சடங்கே இது. வருடம் தோறும் இறந்த திதியில் தந்தை தாயாரைக் குறித்துச் செய்யப்படுவது சிரார்த்தமாகும். மகன் தந்தைக்குச் செய்யும் சிரார்த்தத்தில் தந்தை, பேரன், பூட்டன் ஆகிய மூவருக்கு மூன்று பிண்டமும் தமது வம்சத்தில் உள்ள பிதிர்கள் எல்லோருக்குமாக ஒரு பிண்டமும் இடல் வேண்டும். தாயாருக்குச் சிரார்த்தம் செய்யும்போது தாய், தகப்பனின் தாய், பேரனுடைய தாய் ஆகிய மூவருக்கு மூன்று பிண்டமும் தமது வம்சத்தவருக்கு ஒரு பிண்டமும் இடல் வேண்டும்.

சிரார்த்தம் அன்ன சிரார்த்தம், ஆம சிரார்த்தம், இரணிய சிரார்த்தம், தருப்பண ரூப சிரார்த்தம் என நாலு வகைப்படும்.

### அன்ன சிரார்த்தம்

தம் மரபிலோ அன்றி தம்மில் உயர்ந்த மரபிலோ உள்ள தீட்சை பெற்றவரை அழைத்து நிமித்த தானத்திலிருத்தி குறித்த தானத்திற்கு உரியவராகப் பூசித்து அமுது படைத்து உண்பித்துச் செய்யும் சிரார்த்தமாகும். இதில் அன்னம், எள், பானீயம், தயிர், பால், தேன், நெய், வாழைப்பழம் ஆகிய பொருட்கள் சேர்த்துப் பிண்டமிடல் வேண்டும்.

### ஆம சிரார்த்தம்

உணவிற்குப் பதிலாக அரிசி, காய்கறி வகைகளைப் படைத்துச் செய்யும் சிரார்த்தமாகும். இதில் அரிசிமா, உழுந்துமா, எள், பால், தயிர், நெய், தேன், வாழைப்பழம் ஆகிய பொருட்கள் சேர்த்து உருட்டிப் பிண்டமிடல் வேண்டும். இவ்வெட்டுப் பொருட்களும் அட்டாங்கமெனப்படும்.

### இரணிய சிரார்த்தம்

அன்ன சிரார்த்தம், ஆமசிரார்த்தம் செய்ய வசதியில்லாத போதும் தகுதியானவர் கிடைக்காத போதும் பணத்தை வைத்துச் செய்யப்படுவது இரணிய சிரார்த்தமாகும்

### தருப்பணரூப சிரார்த்தம்

இது அமாவாசையில் செய்யப்படுவதாகும். அன்ன சிரார்த்தத்தில் அன்ன பிண்டமும் ஆம சிரார்த்தத்தில் ஆம பிண்டமும் இடல் வேண்டும். அன்ன சிரார்த்தத்தில் ஆம பிண்டமும் ஆம சிரார்த்தத்தில் அன்ன பிண்டமும் இடுதல் குற்றமாகும்

மாதந்தோறும் அமாவாசை வார நாட்களில் விசேடமாக ஆடி, தை அமாவாசையிலும் இறந்தவரை நினைத்துச் சிரார்த்தம் செய்வதால் குடும்பத்திற்குப் பல நன்மைகள் கிடைக்கப் பெறும் என்பது மக்களின் அசைக்க முடியாத நம்பிக்கையாகும். "அமாவாசையில் சிரார்த்தம் செய்வது பிரசித்தமானது. இதைச் செய்வதால் தன் பிதிர்களுக்குப் பரலோகத்தில் திருப்தியும் தனக்கு வம்சவிருத்தியும் செல்வமும்

உண்டாகிறது" என மநுதருமம் விளக்குகிறது.

### சிராார்த்தத்திற்கு ஆகும் திரவியங்கள்

நெல்லரிசி, கோதுமை, யவம், சிறுபயறு, எள்ளு, சர்க்கரை, வெல்லம், தேன், நல்லெண்ணெய், பசுப்பால், பசுத்தயிர், பசுநெய், சிகைக்காய், மிளகு, சீரகம், மஞ்சள், கடுகு, உப்பு, புளி, வாழையிலை, வாழைத்தண்டு, வாழைக்காய், வாழைப்பழம், மாங்காய், மாம்பழம், பலாக்காய், பலாப்பழம், தேங்காய், இளநீர், பாகற்காய், முள்ளிக்காய், கெக்கரிக்காய், வெள்ளரிக்காய், புடலங்காய், அவரைக்காய், நெல்லிக்காய், எலுமிச்சம்பழம், சிறுகிழங்கு, பெருவள்ளிககிழங்கு, இஞ்சிக்கிழங்கு, கீரை, முல்லையிலை, முசுட்டையிலை, காரையிலை, பிரண்டை, சேப்பந்தண்டு, சேப்பங்கீரை, சேப்பங்கிழங்கு, கருவேப்பிலை, வெற்றிலை, பாக்கு, ஏலம், சுக்கு, கிராம்பு, சாதிக்காய், சாதிபத்திரி.

### சிராார்த்தத்திற்கு ஆகாத திரவியங்கள்

கடலை, துவரை, வெண்கடுகு, பெரும்பயற்றங்காய், பீர்க்கங்காய், அத்திக்காய், முருங்கைக்காய், பூசணிக்காய், கத்தரிக்காய், சுரைக்காய், வாழைப்பூ, முள்ளங்கி, வெங்காயம், வெள்ளைப்பூடு, எருமைப்பால், எருமைத்தயிர், எருமைநெய், ஆட்டுப்பால், ஆட்டுத்தயிர், ஆட்டுநெய்.

### சிராார்த்தத்திற்கு ஆகும் பத்திர புஷ்பம்

வில்வம், துளசி, அறுகு, சம்பகப்பூ, தாமரைப்பூ, புன்னைப்பூ, முல்லைப்பூ, நந்தியா வர்த்தப்பூ, மருக்கொழுந்து, வெட்டிவேர், எட்டிப்பூ.

### சிராார்த்தத்திற்கு ஆகாத புஷ்பம்

மகிழம்பூ, தாழம்பூ, அலரிப்பூ, சிறுசண்பகப்பூ.

கிரியை செய்தவரும் சிரார்த்தத்தின் பொருட்டு வரிக்கப்பட்டவரும் சிரார்த்த தினத்திலும் முதற் தினத்திலும் மறுதினத்திலும் சவரஞ்செய்து கொள்ளுதல், மீண்டும் புசித்தல், வழி நடத்தல், பாரஞ்சுமத்தல், கோபம், பொய், காமம் இவைகளைத் தவிர்த்து விரத நியமமுடையவராய் இருத்தல் வேண்டும். விரத நியமம் தப்பிப் புணர்ச்சி

முதலியவற்றைச் செய்தவர் நரகத்தில் விழுந்து வருந்துவர். கிரியை செய்தவர் இம்மூன்று தினத்திலும் எண்ணெய் தேய்த்து கொள்ளலும் பரான்னம் புசித்தலும் வெற்றிலை பாக்கு உண்ணலும் மருந்து உண்ணலும் ஆகாவாம்.

சிரார்த்த தினத்தில் வீட்டிலே தயிர் கடைதலும் நெற்குத்தலும் பிச்சை போடலும் எண்ணெய், நெல் முதலிய பொருட்களைக் கொடுத்தல் வாங்குதலும் ஆகாவாம்.

சிரார்த்த தினத்தில் திருக்கோவிலிலே கடவுளுக்குத் தன்னால் இயன்ற மட்டும் அபிஷேகம், பூஜை, திருவிளக்கேற்றுதல் முதலியன செய்தல் வேண்டும். பசுவிற்குப் புல்லுப்போடல் வேண்டும்.

சிராரத்தம் நடக்கும்போது வேதத்தையும் திருமுறைகளையும் புராண இதிகாசங்களையும் தருமசாத்திரத்தையும் சிரார்த்தம் வாங்குவோருக்குக் கேட்கும்படி படிப்பித்தல் வேண்டும். இது பிதிர்களுக்கு மிகப் பிரியமாகும்.

சிரார்த்தத்திலே கண்ணீர் விடுதலும் கோபித்தலும் பொய் சொல்லுதலும் துரிதஞ்செய்தலும் சிந்திய அன்னத்தைக் காலாலே மிதித்தலும் இலையிலே அன்னத்தைத் தூவிப் பரிமாறலும் ஆகாவாம். சிரார்த்தமேற்பவர் நன்று, தீது என்று பேசாது திருப்தியோடு ஏற்றல் வேண்டும்.

சிரார்த்தத்திற்குப் பொருள் இல்லாதவன் காய், கனி, கிழங்கு, எள் இவைகளையேனும் சற்பிராமணருக்குக் கொடுத்து நமஸ்காரம் செய்து திலதர்ப்பணம் பண்ணிக் கொண்டு (திலம் - எள்ளு) தான் திருப்தியாகப் போசனம் பண்ணல் வேண்டும்.

## மாளயம்

மாளயம் என்பது பிதிர் கருமமாகும். இது மஹாளயம் என்றும் பெயர் பெறும். இது ஒரு பொது சிரார்த்த (திவசம்) மாகும்.

புரட்டாதி மாத அபரபக்கப் பிரதமை முதல் அமாவாசை வரையுள்ள காலம் மாளயபட்சமாகும். பிதிர்களைத் திருப்திப்படுத்தவும் அவர்கள் நற்கதி அடையவும் பிதிர்க்கருமங்கள் செய்ய வேண்டும். இல்லறத்தானுக்கு உரிய கருமங்களிற் பிதிர்க்கடனும் ஒன்று. ஐவேள்விகளில் பிதிர்யக்ஞமும் (பிதிர் வேள்வி) ஒன்று.

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு

ஐம்புலத்தா றோம்பல் தலை"

என்பது திருக்குறள். பிதிர்களின் உறைவிடம் தென்திசை ஆதலால் தென்புலத்தார்

என்று பெயர் பெறுவர்.

சூரியன் தெற்கு நோக்கிச் சஞ்சரிக்கும் தெட்சணாயன காலத்தின் நடுப்பகுதி புரட்டாதி மாதமாகும். இக்காலம் சூரியன் பூமிக்கு நேரே நிற்கும் காலம். சந்திரனும் (அபர பக்கத்தில்) தென்பாகத்திற் பொருந்தி இருக்கிறது. இக்காலம் பிதிர் கருமங்களுக்கு ஏற்றதாகக் கொள்ளப்படும்.

ஒருவர் இறந்த தினத்தில் அவருக்குச் சிரார்த்தம் (திவசம்) செய்தல் வேண்டும். இறந்த தினம் தெரியாவிட்டால் அந்த மாதத்தில் அமாவாசையன்று செய்தல் வேண்டும். அல்லது மாளயபட்சத்திற் செய்து கொள்ளலாம். தெரிந்தோ தெரியாமலோ சிரார்த்தத் தைச் செய்யாது விட்டவர்கள் மாளயபட்சத்திற் பிதிர்க்கருமம் செய்தல் வேண்டும்.

இந்தப்பட்சம் முழுவதும் பிதிர்க்கருமம் செய்தால் வருடம் முழுவதும் செய்தபலன் கிடைக்கும். பிரதமையில் தன சம்பத்தும், துவிதியையில் பிரஜாலாபமும், திருதியையில் வளர்ச்சி லாபமும், சதுர்த்தசியில் சத்துரநாசமும், பஞ்சமியில் சம்பத்தும், சஷ்டியில் புகழும், சப்தமியில் கணாதிபத்தியமும், அட்டமியில் சிறந்த புத்தியும் நவமியில் ஸ்திரீ சம்பத்தும், தசமியில் இஷ்ட சித்தியும், ஏகாதசியில் வேதசித்தியும், துவாதசியில் பிரஜாவிருத்தியும், திரயோதசியில் பசு விருத்தியும், சதுர்த்தசியில் புஷ்டியும், அமாவாசையில் தீர்க்க ஆயுளும் கிடைக்கும். யந்திரங்களால் இறப்போருக்குச் சதுர்த்தசியிற் பிதிர் கருமம் செய்வது சிறந்தது.

இப்பட்சத்தில் வரும் பரணி, அட்டமி கஜச்சாயை எனப்படும். கஜச்சாயை எனப்படுவது புரட்டாதி மாதத்தில் எந்த வாரத்திலாவது மகநட்சத்திரம் திரயோதசித் திதியும் கூடி வருவது இது ஒரு புண்ணிய காலமாகும். இக்காலத்திற் செய்யும் கருமத்திற்கும் பலன் அதிகம்.

பிதிர்கருமங்கள் ஆற்றச் சிறந்த தலங்களாக அயோத்தி, மதுரை, மாயாபுரி, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என்பன அமைந்துள்ளன. காயாவிற் செய்யப்படும் சிரார்த்தம் மிகவும் விசேடமானதாகும். திரயோதசியில் செய்யும் சிரார்த்தம் காயா சிரார்த்தத்தையொத்தது.

நாம் அனுப்பும் தபால், காசுக்கட்டளை போன்றவற்றைத் தபாற் கந்தோரில் இருப்பவர்கள் உரியவர்களிடம் கொண்டு சென்று கொடுப்பர். இதுபோலப் பிதிர்க்கருமத்தில் செய்யப்படும் தர்ப்பணம், தானம் முதலியவற்றின் பலன்களை உரியவர்கள் இருப்பிடம் அறிந்து அவர்களிடம் சேர்ப்பிப்பர். பிதிர்த் தேவதைகள்,

ஸ்கந்தர், சண்டர், கணதீததர் என்போர் பிதிர்த்தேவதைகளாவர். சமய விசேட, நிர்வாண தீட்சிதருக்கு சாந்தர், சதாசிவர், ஈசர் என்போர் பிதிர் தேவதைகளாகும். பிதாவின் உயிர் ஸ்கந்த பதத்தில் ஸ்கந்த சொருபமாகவும் பாட்டனுடைய உயிர் சண்டபதத்தில் சண்ட சொருபமாகவும் முப்பாட்டனுடைய உயிர் கணாதீதபதத்தில் கணாதீத சொருபமாகவும் இருக்கும்.

இக்காலத்தில் விரதமிருந்து பிதிர் தர்ப்பணம், தான, தருமம், சாதுக்கள், அடியவர், ஏழைகள் ஆகியோருக்கு அமுதளித்தல் போன்றன செய்தல் வேண்டும்.



அபரக் கிரியையின்போது தோரணம் கட்டப்படும் முறை

## அதிதி பூசை பிதிர் பூசை

இது வேதத்தில் வெகு சிறப்பாக விளக்கப்பட்டுள்ளது. தமிழர்களுக்கு இன்றியமையாத சிறந்த ஒரு தருமமாகக் கருதப்பட்டுள்ளது. அந்தத் தருமம் கால வெள்ளத்தில் மறைந்து விட்டது. சூழ்நிலையும் மாறிவிட்டது. விருந்தோம்புதல் என்ற

தர்மத்தைச் சிறப்பாகக் கருதிவந்த காலம் ஒன்று இருந்தது. இப்பொழுது அதனைச் செய்தல் எவ்வகையாலும் முடியாது. ஆகவே முன்னோர்கள் அதற்குச் சமமாக ஒருவழி வகுத்துள்ளனர். சோறு சமைத்தவுடன் தினமும் காகத்திற்கு வைக்க வேண்டும் என்ற நியதியை வகுத்துள்ளனர். இதுவே அதிதி பூசையாகும்; பிதிர் பூசையுமாகும். திவசத்தன்று காகத்திற்குச் சோறு வைத்தலை இன்றும் காணலாம்.

மேலும் சனிப் பிரீதியை முன்னிட்டு சனிக்கிழமையில் சோறுபோடும் வழக்கமுண்டு. தினமும் அவவாறு செய்து வந்தால் அதிதிபூசை, பிதிர்பூசை, சனிப்பிரீதி யாவும் அடங்கிவிடும். இதனை வாயஸ பலி என்று கூறுவார்கள். ஒருவர் இருவருக்கு தினம் உணவு கொடுக்க எல்லாருக்கும் சக்தி இராது. ஆகவே இந்த தர்மம் செய்வது சிறிய அளவு. அதனால் வரும் பயன் பெரிய அளவு. இதனை வைசுவ தேவம் என்று கூறுவார்கள். எல்லாத் தேவர்களையும் குறித்துப் பலி இட்டு அந்தப் பலியுணவைக் காகத்திற்குப் போடுதல் என்ற முறை நூறு வருடங்களுக்குமுன் பெரும்பான்மையாக நடந்து வந்துள்ளது. பஞ்சமும் பற்றாக் குறையும் ஏற்பட்டதும் அது குன்றியது. ஆகவே இந்தத் தர்மம் செய்ய வேண்டியது முக்கியமாகும்.

கிராமப் பகுதியில் இதனை அனுட்டிக்க ஒருவாறு முடியலாம். நகரங்களில் வசிப்பவர்களுக்கு வசதிக்குறைவு ஏற்படக்கூடும். அவர்களும் சமைப்பதற்கு முன் ஒருபிடி அரிசியை ஒரு பாத்திரத்தில் எடுத்துப் போட்டு மாத முடிவில் அண்மையில் உள்ள ஆலயத்தில் கொடுத்துப் பகவானுக்கு நிவேதிக்க ஏற்பாடு செய்து வந்தால் அதிதிபூசைப் பலன், பிதிர் பூசைப் பலன் கிடைக்கும். முன் காட்டிய வழிதான் செய்ய வேண்டும். காகங்கூட இல்லாத இடமாக இருந்தால் அவர்களுக்கும் இந்தத் தர்மபலன் கிடைப்பதற்குப் பிந்திய முறை சொல்லப்பட்டது.

## ஸ்ரீ ஜயேந்திரர் சுவாமிகளின் பதில்கள்

**அமாவாசை, புண்ணிய தினம், விசேஷ பண்டிகை நாட்களில் காக்கைக்கு மட்டும் அன்னம் படைக்கிறார்கள். தினமும் பூஜை முடிந்த பிறகும் காக்கைக்கு அன்னமிடுதல் எல்லார் வீடுகளிலும் உண்டு. இதன் தாத்பர்யம் என்ன?**

பறவைகளில் காக்கைக்கு இரை போடுவது மனிதர்களிடம் வாழையடி வாழையாக வந்திருக்கும் ஒரு புனிதச் செயலாகும். காக்கை தவிர மற்ற பட்சிகள், மிருகங்களுக்கு உணவு அளித்தால் மற்றவற்றை அழைக்காது; தானே சாப்பிட்டு விடும்.

ஆனால் காகம் கரைந்துண்ணும். ஒரு காகம் மற்ற காகங்களை உணவு உண்ண அழைக்கிறது. காக்கைக்கு உணவு தருவதற்கான பலன்கள் புராண நூல்களில் விசேடமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

**மறைந்து போனவர்கள் மீண்டும் உலகில் பிறந்து விடுகிறார்கள். பிறகு ஏன் பித்ரு (தென் புலத்தாருக்கு) கடன் செய்கிறார்கள்.**

வாழ்ந்த மனிதர்கள் ஆயுள் முடிந்து இறந்து விடுகிறார்கள். மீண்டும் உலகில் பிறவி எடுத்திருந்தாலும் நம்மை வளர்தது ஆளாக்கியிருப்பதற்காகவே பித்ரு கடன் செய்யவேண்டும். அவர்கள் எப்பிறவியில் பிறந்திருப்பினும் இன்பமாக இருப்பதற்கு பித்ரு கடன் இன்றியமையாதது.

**ஒரு மனிதனின் மரணத்திற்குப் பின்பு என்ன நிகழ்கிறது?**

ஒரு மனிதன் வாழ்நாளில் செய்த நல்ல செயலுக்கு தீய செயலுக்கு ஏற்றவாறு மரணத்துக்குப் பின் பலன் அவனை அடைகிறது. அதாவது மறுபிறப்பில்.

**திவசம் கொடுக்க வழியில்லாதவர்கள் அதற்கு மாற்றாக ஏதாவது செய்யலாமா?**

பசு மாட்டிற்கு ஆகாரம் வைக்கலாம்.

**இறந்தவர்கள், பெற்றோர்கள் ஆகியோரின் படங்களையும் சுவாமி படங்களையும் சேர்த்து மாட்டலாமா?**

சுவாமி படங்கள் இருக்கும் வரிசையில் வைக்காமல் வேறு வரிசையில் மாட்டலாம். சுவாமி படங்களுக்குக் கீழ் வரிசையில் அப்படங்களை மாட்டலாம். தனி இடத்தில் உயரமாக மாட்டலாம்.

## சிரார்த்த திதி

ஒருவருக்குச் சிரார்த்தம் செய்யும்போது அவர் இறந்த தமிழ் மாதம் பட்சம் திதி எது என அறிந்து அத்திதியில் சிரார்த்தம் செய்தல் வேண்டும்.

உதாரணமாக புரட்டாசி மாத பூர்வ (வளர்பிறை) பட்சத்தசமி திதியில் சிரார்த்தம் என்றால் அது நவராத்திரி இறுதி நாள் எனக் கொண்டு சிரார்த்த நிர்ணயம் செய்யக்கூடாது. ஏனெனில் நவராத்திரி இறுதி நாள் சிலவேளையில் ஐப்பசி மாதத்திலும் வரும். இப்படி வரும்போது சிரார்த்தத்திற்கு முதல் மாதம் சிரார்த்த திதியைப் பார்த்து நிர்ணயம் செய்து கொள்ள வேண்டும். சிலவேளைகளில் உரியதிதி அம்மாதத்தில் அமையாது முதல் மாதத்திலும் அமையலாம். திதியானது பகல் மணி 12

நிமிடத்திற்கும் 3 மணி 36 நிமிட இடையில் வியாபித்திருக்குமானால் அன்றே அந்தத் திதியில் காலையில் அந்த திதி இல்லாவிட்டாலும் பரவாயில்லை. இந்நேரத்தை அபரான்ன காலம் எனப்படும்.

அமாவாசைக்கும் பௌர்ணமிக்கும் இடையிலுள்ள காலத்தைப் பூர்வபட்சம் என்றும் (வளர்பிறை) பௌர்ணமிக்கும் அமாவாசைக்கும் இடையிலுள்ள காலத்தை அபரபட்சம் (தேய்பிறை) என்றும் சொல்வர். திதியானது மாலை 3 1/2 மணிக்குப்பின் ஆரம்பமாகி அடுத்தநாள் மதியம்வரை இருக்குமானால் அடுத்தநாள் செய்யலாம்.

திதியானது தமிழ் மாத ஆரம்பத்திலும் கடைசியிலும் வருமானால் பிந்தின திதியில் செய்ய வேண்டும் பிந்தின திதியில் மாதப்பிறப்பு, கிரகணதோஷம் இருக்குமானால் முந்தின திதியில் செய்ய வேண்டும்.

இரண்டு திதியும் மாதப் பிறப்பாக இருந்தால் பிந்தின திதியில் செய்யலாம். உலகில் பிறந்த அனைத்து உயிர்களுமே இறப்பினைச் சந்தித்துத்தான் ஆகவேண்டும். இரவு நேரத்தில் இருள் வருவது இயற்கை; அதுபோல உரிய நேரத்தில் மானிடர்க்குச் சாவு வருவதும் இயற்கையாகும். மனிதருக்குச் சாவு வரும் என்பதையே நாட்டுப்புற மக்கள் தலைவிதி எனக் கூறுகின்றனர். ஓர் உயிர் பிறக்கும்போதே அதன் தலைவிதி நிர்ணயிக்கப்பட்டு விடுகிறது என்றும் அதன்படியே அவ்வுயிர் இவ்வுலகில் இன்பத்தையும் துன்பத்தையும் அனுபவித்து அதற்குக் கொடுக்கப்பட்ட காலம்வரை உலகில் வாழ்கிறது என்றும் நம்பிக்கைகள் இருந்து வருகின்றன. ஓர் உடலில் இருந்து பிரிந்து சென்ற உயிர் வேறொரு உடலைச் சென்றடைகிறது என்ற நம்பிக்கையும் இறந்தோரின் ஆன்மா வேறுலகிற்குச் சென்று வாழும் என்ற நம்பிக்கையும் நாட்டுப்புற மக்களிடையே காணப்படுகின்றன.

"நீங்க போன இடத்துக்கு நான் பொங்கிபோட வருவதெப்போ" என்ற நாட்டுப்புறப் பாடலடிகள் மறுவுலக வாழ்வின் நம்பிக்கையை விளக்குகின்றன.

**முடிவுரை:**

இறந்தவர்கள் நற்கதியை அடையவேண்டும் என்பதற்காகவே ஒவ்வொரு சடங்கும் செய்யப்படுகிறது.

# அபரக் கிரியையின் திருமுறைப் பாடல்கள்

## திருநாவுக்கரசர் தேவாரம்

திருச்சிற்றம்பலம்

சிந்திப் பரியன சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன்
முந்திப் பொழிவன முத்தி கொடுப்பன மொய்த்திருண்டு
பந்தித்து நின்ற பழவினை தீர்ப்பன பாம்பு சுற்றி
அந்திப் பிறையணிந் தாடுமை யாறனடித்தலமே.

நடலை வாழ்வு கொண்டேன் செய்தீர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற் பிரமாணமே
கடலினஞ்சமு துண்டவர் கைவிட்டால்
உடலினார் கிடந்தூரமுனி பண்டமே.

தந்தையார் தாயார் உடன் பிறந்தார்
தாரமார் புத்திரரார் தாத்தா மாரே
வந்தவாறெங்ஙனே போமா றேதோ
மாயமாமிதற்கேதும் மகிழ வேண்டா
சிந்தையீர் உமக்கென்று சொல்லக் கேண்மின்
திகழ்மதியும் வாளரவும் திளைக்குஞ் சென்னி
எந்தையார் திருநாமம் நமச்சிவாய
என்றெழுவார்க் கிருவிசும்பி லிருக்கலாமே.

எண்ணுக்கே னென்சொல்லி யெண்ணு கேனோ
வெம்பெருமான் திருவடியே யெண்ணி னல்லால்
கண்ணிலேன் மற்றோர் களைகணில்லேன்
கழலடியே கைதொழுது காணினல்லால்
ஒண்ணுலோ பொன்பது வாசல் வைத்தா
யொக்க வடைக்கும் போதுணர மாட்டேன்
புண்ணியா வுன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே.

அங்கத்தை மணணுக்காக்கி ஆர்வத்தை உனக்கே தந்து
பங்கத்தைப் போக மாற்றிப் பாவித்தேன் பரமா நின்னைச்
சங்கொத்த மேனிச் செல்வா சாதல்நாள் நாளேனுன்னை
எங்குற்றாயென்ற போதா இங்குற்றேனென் கண்டாயே.

இருளாய உள்ளத்து இருளை நீக்கி
இடர் பாவங் கெடுத்தேழை யேனையுய்யத்
தெருளாத சிந்தைதனைத் தெருட்டித் தன்போற்
சிவலோக நெறியறியச் சிந்தை தந்த
அருளானை ஆதிமா தவத்துளானை
ஆறங்கம் நால்வேதத் தப்பால் நின்ற
பொருளானைப் புள்ளிருக்கு வேளூரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே.

## சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம்

வெறுத்தேன் மனைவாழ்க்கை யைவிட் டொழிந்தேன்
விளங்குங் குழைக்காதுடை வேதியனே
இறுத்தாய் இலங்கைக் கிறையா யவனைத்
தலைப்பத்தோடு தோள்பல இற்று விழக்
கறுத்தாய் கடல் நஞ்சமுதுண்டு கண்டம்
கடுகப்பிரமன் தலை ஐந்திலுமொன்
றறுத்தாய் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ்சை களத்தப்பனே.

வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய் செய்த பறிதான்
தாழாதறஞ் செய்மின் தடங் கண்ணான் மலரோனும்
கீழ்மேலுற நின்றான் றிருக் கேதாரமெனீரே.

இந்திரன் மால்பிரமன் எழிலார்மிகு தேவரெல்லாம்
வந்தெதிர் கொள்ள என்னை மத்யானையருள் புரிந்து
மந்திர மாமுனிவரி வனாரென எம்பெருமான்
நந்தமர் ஊரனென்றான் நொடித்தான் மலையுத்தமனே.

மந்திர மொன்றறியேன் மனைவாழ்க்கை மகிழ்ந்தடியேன்
சுந்தர வேடங்களால் துரிசே செயுந் தொண்டனெனை
அந்தரமால் விசும்பில் அழகானை யருள்புரிந்த
துந்தரமோ நெஞ்சமே நொடித்தான் மலையுத்தமனே.

திருச்சிற்றம்பலம்

உ

சிவமயம்

## மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய திருவாசகம்
## சிவபுராணம் (8ஆம் திருமுறை)

திருச்சிற்றமபலம்



**தொல்லை இரும்பிறவிச் சூழும் தளைநீக்கி**
**அல்லலறுத் தானந்தம் ஆக்கியதே - எல்லை**
**மருவா நெறிஅளிக்கும் வாதவூர் எங்கோன்**
**திருவா சகம்என்னும் தேன்.**

நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவ னடிவாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி - வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவா ருண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன் கழல் வெல்க

ஈச னடிபோற்றி எந்தை யடிபோற்றி
தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநம் தேவ னடிபோற்றி
ஆராத இன்பம் அருளு மலைபோற்றி
சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவனருளாலே அவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய வுரைப்பன்யான்
கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை இலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யவென் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா வெனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவே
ஆக்கம் அளவிறுதி இல்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள் தருவாய்
போக்குவா யென்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோர் ஐந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல் போர்த்தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ் சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய

விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்த அன்பாகிக் கசிந்துள் உருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன் மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள் புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கியென் ஆருயிராய் நின்றானே
இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே
அன்பருக்கு அன்பனே யாவையுமா யல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தால் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்கும் எம் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தா மிக்காய் நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவே என் சிந்தனையுள்
ஊற்றான உண்ணார் அமுதே உடையானே
வேற்று விகார விடக்குடம்பின் உட்கிடப்ப
ஆற்றேனெம் ஐயா அரனேயோ வென்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி அறுப்பானே ஓவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக் கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக் கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்

**திருவாசகச் சிறப்பு**

கற்பாந்த காலங் கடவாக் கடல் கடக்கத்
தெப்பமாய் வந்தெனக்குச் சேர்ந்ததே - அப்பன்
உருவா சகங் கொண் டுரைத்த தமிழ்மாலைத்
திருவாச கம்என்னும் தேன்.

## திருவாசகம்

யாத்திரைப் பத்து

திருச்சிற்றம்பலம்

பூவார் சென்னி மன்னனெம் புயங்கப்
பெருமான் சிறியோமை
ஓவா துள்ளங் கலந்துணர்வாய் உருக்கும்
வெள்ளக் கருணையினால்
ஆஆ என்னப் பட்டன்பாய் ஆட்பட்
டீர்வந் தொருப்படுமின்
போவோம் காலம் வந்ததுகாண் பொய்விட்
டுடையான் கழல்புகவே.

புகவே வேண்டா புலன்களில்நீர் புயங்கப்
பெருமான் பூங்கழல்கள்
மிகவே நினைமின் மிக்கவெல்லாம் வேண்டா
போக விடுமின்கள்
நகவே ஞாலத் துள்புகுந்து நாயே
அனைய நமையாண்ட
தகவே யுடையான் தனைச்சாரத் தளரா
திருப்பார் தாந்தாமே.

தாமே தமக்குச் சுற்றமும் தாமே
தமக்கு விதிவகையும்
யாமார் எமதார் பாசமார் என்ன
மாயம் இவைபோகக்
கோமன் பண்டைத் தொண்டரொடும் அவன்றன்
குறிப்பே குறிக்கொண்டு
போமா றமைமின் பொய்நீக்கிப் புயங்கன்
ஆள்வான் பொன்னடிக்கே.

அடியார் ஆனீர் எல்லீரும் அகல
விடுமின் விளையாட்டைக்
கடிசே ரடியே வந்தடைந்து கடைக்கொண்
டிருமின் திருக்குறிப்பைச்
செடிசே ருடலைச் செலநீக்கிச் சிவலோ
கத்தே நமைவைப்பான்
பொடிசேர் மேனிப் புயங்கன்றன் பவார்
கழற்கே புகவிடுமே.

விடுமின் வெகுளி வேட்கைநோய் மிகவோர்
காலம் இனியில்லை
உடையான் அடிக்கீழ்ப் பெருஞ்சாத்தோ டுடன்போ
வதற்கே ஒருப்படுமின்
அடைவோம் நாம்போய்ச் சிவபுரத்துள் அணியார்
கதவ தடையாமே
புடைபட் டுருகிப் போற்றுவோம் புயங்கன்
ஆள்பவான் புகழ்களையே.

புகழ்மின் தொழுமின் பூப்புனைமின் புயங்கன்
தாளே புந்திவைத்திட்டு
இகழ்மின் எல்லா அல்லலையும் இனியோர்
இடையூ றடையாமே
திகழுஞ் சீரார் சிவபுரத்துச் சென்று
சிவன்தாள் வணங்கிநாம்
நிகழும் அடியார் முன்சென்று நெஞ்சம்
உருகி நிற்போமே.

நிற்பார் நிற்கநில் லாவுலகில் நில்லோம்
இனிநாம் செல்வோமே
பொற்பால் ஒப்பாந் திருமேனிப் புயங்கன்
ஆள்வான் பொன்னடிக்கே
நிற்பீர் எல்லாந் தாழாதே நிற்கும்
பரிசே ஒருப்படுமின்
பிற்பால் நின்று பேழ்கணித்தால் பெறுதற்
கரியான் பெருமானே.

பெருமான் பேரா னந்தத்துப் பிரியா
திருக்கப் பெற்றீர்காள்
அருமா லுற்றுப் பின்னைநீர் அம்மா
அழுங்கி அரற்றாதே
திருமா மணிசேர் திருக்கதவந் திறந்த
போதே சிவபுரத்துத்
திருமா லறியாத் திருப்புயங்கன் திருத்தாள்
சென்று சேர்வோமே.

சேரக் கருதிச் சிந்தனையைத் திருந்த
வைத்துச் சிந்திமின்
போரிற் பொலியும் வேற்கண்ணாள் பங்கன்
புயங்கன் அருளமுதம்
ஆரப் பருகி ஆராத ஆர்வங்
கூர அழுந்துவீர்
போரப் புரிமின் சிவன்கழற்கே பொய்யிற்
கிடந்து புரளாதே

புரள்வார் தொழுவார் புகழ்வாராய் இன்றே
வந்தா ளாகாதீர்
மருள்வீர் பின்னை மதிப்பாரார் மதியுட்
கலங்கி மயங்குவீர்
தெருள்வீர் ஆகில் இதுசெய்ம்மின் சிவலோ
கக்கோன் திருப்புயங்கன்
அருளார் பெறுவார் அகலிடத்தே அந்தோ
அந்தோ அந்தோவே.

திருச்சிற்றம்பலம்

உ

சிவமயம்

# மாணிக்கவாசக சுவாமிகளால் தில்லையில் அருளிச் செய்யப்பட்ட திருப்பொற் சுண்ணம்

முத்துநற் றாமம்பூ மாலை தூக்கி
முளைக்குடந் தூபநற் றீபம் வைம்மின்
சத்தியுஞ் சோமியும் பார்மகளும்
நாமக ளோடுபல் லாண்டிசைமின்
சித்தியுங் கௌரியும் பார்ப்பதியுங்
கங்கையும் வந்து கவரிகொண்மின்
அத்தனை யாறனம் மானைப்பாடி
யாடப்பொற் சுண்ண மிடித்துநாமே!

பூவியல் வார்சடை யெம்பிராற்குப்
பொற்றிருச் சுண்ண மிடிக்கவேண்டும்!
மாவின் வடுவகி ரன்னகண்ணீர்
வம்மின்கள் வந்துடன் பாடுமின்கள்
கூவுமின் றொண்டர் புறம்நிலாமே
குனிமின் றொழுமினெங் கோனெங்கூத்தன்
தேவியுந் தானும்வந் தெம்மையாளச்
செம்பொன்செய் சுண்ண மிடித்துநாமே'

சுந்தர நீறணிந் தும்மெழுகித்
தூயபொன் சிந்தி நிதிபரப்பி
இந்திரன் கற்பக நாட்டியெங்கும்
எழிற்சுடர் வைத்துக் கொடியெடுமின்
அந்தரர் கோனயன் றன்பெருமான்
ஆழியா னாதனல் வேலன்றாதை
எந்தர மாளுமை யாள்கொழுநற்
கேய்ந்தபொற் சுண்ண மிடித்துநாமே!

காசணிமின்க ளுலக்கை யெல்லாம்
காம்பணி மின்கள் கறையுரலை
நேச முடையஅடிய வர்கள்
நின்றுநிலாவுக என்று வாழ்த்தித்
தேசமெல் லாம்புகழ்ந் தாடுங்கச்சித்
திருவேகம் பன்செம்பொற் கோயில்பாடிப்
பாச வினையைப் பறித்துநின்று
பாடிப்பொற் சுண்ண மிடித்துநாமே.

அறுகெடுப் பாரய னும்மரியும்
அன்றி மற்றிந்திர னோடமரர்
நறுமுறு தேவர் கணங்களெல்லாம்
நம்மிற்பின் பல்லதெ டுக்கவொட்டோம்

செறிவுடை மும்மதி லெய்தவில்லி
திருவேகம் பன்செம்பொற் கோயில்பாடி
முறுவற்செவ் வாயினீர் முக்கணப்பற்
காடப்பொற் சுண்ண மிடித்துநாமே!

உலக்கை பலவோச்சு வார்பெரியர்
உலகமெ லாமுரல் பேதாதென்றே
கலக்க வடியவர் வந்து நின்றார்
காண வுலகங்கள் போதாதென்றே
நலக்க அடியோமை யாண்டு கொண்டு
நாண் மலர்ப் பாதங்கள் சூடத்தந்த
மலைக்கு மருகனைப் பாடிப்பாடி
மகிழ்ந்துபொற் சுண்ண மிடித்துநாமே!

சூடகந் தோள்வளை யார்ப்ப வார்ப்பத்
தொண்டர் குழாமெழுந் தார்ப்பவார்ப்ப
நாடவர் நந்தம்மை யார்ப்பவார்ப்ப
நாமு மவர்தம்மை யார்ப்பவார்ப்ப
பாடக மெல்லடி யார்க்குமங்கை
பங்கின னெங்கள் பராபரனுக்
காடக மாமலை யன்னகோவுக்
காடப் பொற்சுண்ண மிடித்துநாமே!

வாட்டங் கண்மட மங்கை நல்லீர்
வரிவளை யார்ப்பவண் கொங்கை பொங்கத்
தோட்டிரு முண்டந் துதைந்திலங்கச்
சோத்தெம்பி ரானென்று சொல்லிச்சொல்லி
நாட்கொண்ட நாண்மலர்ப் பாதங்காட்டி
நாயிற் கடைப்பட்ட நம்மையிம்மை
ஆட்கொண்ட வண்ணங்கள் பாடிப்பாடி
ஆடப்பொற் சுண்ண மிடித்துநாமே!

வையக மெல்லா முரலதாக
மாமேரு வென்னு முலக்கைநாட்டி
மெய்யெனு மஞ்சள் நிறைய அட்டி
மேதகு தென்னன் பெருந்துறையான்
செய்ய திருவடி பாடிப்பாடிச்
செம்பொனு லக்கை வலக்கைபற்றி
ஐய னணிதில்லை வாணனுக்கே
ஆடப்பொற் சுண்ண மிடித்துநாமே!

முத்தணி கொங்கைக ளாடவாட
மொய்குழல் வண்டின மாடவாடச்
சித்தஞ் சிவனொடு மாடவாடச்
செங்கயற் கண்பனி யாடவாடப்

பித்தெம் பிரானொடு மாடவாடப்
பிறவி பிறரொடு மாடவாட
அத்தன் கருணையொ டாடவாட
ஆடப் பொற்சுண்ண மிடித்துநாமே!

மாடு நகைவா ணிலாவெறிப்ப
வாய்திறந் தம்பவ ளந்துடிப்பப்
பாடுமி னந்தம்மை யாண்டவாறும்
பணிகொண்ட வண்ணமும் பாடிப்பாடித்
தேடுமி னெம்பெரு மானைத்தேடிச்
சித்தங் களிப்பத் திகைத்துத்தேறி
ஆடுமி னம்பலத் தாடினானுக்
காடப்பொற் சுண்ண மிடித்துநாமே!

மையவர் கண்டமை வானநாடர்
மருந்தினை மாணிக்கக் கூத்தன்றன்னை
ஐயனை யையர்பி ரானை நம்மை
அகப்படுத் தாட்கொண் டருமைகாட்டும்
பொய்யர்தம் பொய்யனை மெய்யர் மெய்யைப்
போதரிக் கண்ணிணைப் பொற்றொடித்தோட்
பையர வல்குல் மடந்தைநல்லீர்
பாடிப்பொற் சுண்ண மிடித்துநாமே!

மின்னிடைச் செந்துவர் வாய்க்கருங்கண்
வெண்ணகைப் பண்ணமர் மென்மொழியீர்
என்னுடை யாரமு தெங்களப்பன்
எம்பெரு மானிம வான்மகட்குத்
தன்னுடைக் கேள்வன் மகன்தகப்பன்
தமையனெம் மையன் தாள்கள்பாடிப்
பொன்னுடைப் பூண்முலை மங்கைநல்லீர்
பொற்றிருச் சுண்ண மிடித்துநாமே!

சங்க மரற்றச் சிலம்பொலிப்பத்
தாழ்குழல் சூழ்தரு மாலையாடச்
செங்கனி வாயித ழுந்துடிப்பச்
சேயிழை யீர்சிவ லோகம்பாடிக்
கங்கை யிரைப்ப அராவிரைக்குங்
கற்றைச் சடைமுடி யான்கழற்கே
பொங்கிய காதலிற் கொங்கை பொங்கப்
பொற்றிருச் சுண்ண மிடித்துநாமே!

ஞானக் கரும்பின் தெளிவைப்பாகை
நாடற் கரிய நலத்தைநந்தாத்
தேனைப் பழச்சுவை யாயினானைச்
சித்தம் புகுந்துதித் திக்கவல்ல
கோனைப் பிறப்பறுந் தாண்டுகொண்ட
கூத்தனை நாத்தழும் பேறவாழ்த்திப்

பானற் றடங்கண் மடந்தை நல்லீர்
பாடிப்பொற் சுண்ண மிடித்துநாமே!

ஆவகை நாமும்வந் தன்பர் தம்மோ
டாட்செய்யும் வண்ணங்கள் பாடிவிண்மேல்
தேவர்க ளாவிலுங் கண்டறியாச்
செம்மலர்ப் பாதங்கள் காட்டுஞ்செல்வச்
சேவக மேந்திய வெல்கொடியான்
சிவபெரு மான்புரஞ் செற்றகொற்றச்
சேவக னாமங்கள் பாடிப்பாடிச்
செம்பொன்செய் சுண்ண மிடித்துநாமே!

தேனக மாமலர்க் கொன்றைபாடிச்
சிவபுரம் பாடித் திருச்சடைமேல்
வானக மாமதிப் பிள்ளைபாடி
மால்விடை பாடி வலக்கையேந்தும்
ஊனக மாமழுச் சூலம்பாடி
உம்பரு மிம்பரு முய்யவன்று
போனக மாகநஞ் சுண்டல்பாடிப்
பொற்றிருச் சுண்ண மிடித்துநாமே!

அயன்றலை கொண்டுசெண் டாடல்பாடி
அருக்க னெயிறு பறித்தல்பாடிக்
கயந்தனைக் கொன்றுரி போர்த்தல்பாடிக்
காலனைக் காலா லுதைத்தல்பாடி
இயைந்தன முப்புர மெய்தல்பாடி
ஏழை யடியோமை யாண்டு கொண்ட
நயந்தனைப் பாடிநின் றாடியாடி
நாதற்குச் சுண்ண மிடித்துநாமே!

வட்ட மலர்க்கொன்றை மாலைபாடி
மத்தமும் பாடி மதியும்பாடிச்
சிட்டர்கள் வாழுந்தென் றில்லைபாடிச்
சிற்றம் பலத்தெங்கள் செல்வம்பாடிக்
கட்டிய மாசுணக் கச்சைபாடிக்
கங்கணம் பாடிக் கவித்தகைம்மேல்
இட்டுநின் றாடு மரவம்பாடி
ஈசற்குச் சுண்ண மிடித்துநாமே!

வேதமும் வேள்வியு மாயினார்க்கு
மெய்ம்மையும் பொய்ம்மையு மாயினார்க்குச்
சோதியு மாயிரு ளாயினார்க்குத்
துன்பமு மாயின்ப மாயினார்க்குப்
பாதியு மாய்முற்று மாயினார்க்குப்
பந்தமு மாய்வீடு மாயினாருக்
காதியு மந்தமு மாயினாருக்
காடப்பொற் சுண்ண மிடித்துநாமே!

உ

# பட்டினத்தார் பாடல்கள்

**திருஏகம்பம்**

எத்தனைஊர் எத்தனைவீடு எத்தனைதாய் பெற்றவர்கள்
எத்தனைபேர் இட்டுஅழைக்க ஏன்என்றேன் - நித்தம்
எனக்குக் களை ஆற்றாய் ஏகம்பா கம்பா
உனக்குத் திருவிளையாட்டோ.

**திருக்குற்றாலம்**

காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடைவாய் படும்முன்னே - மேல்விழுந்தே
உற்றார் அழும்முன்னே ஊரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு.

**பொது**

விட்டுவிடப் போகுதுஉயிர் விட்டஉடனே உடலைச்
சுட்டுவிடப் போகின்றார் சுற்றத்தார் - பட்டதுபட்டு
எந்நேர மும்சிவனை ஏத்துங்கள் போற்றுங்கள்
சொன்னேன் அதுவே சுகம்.

ஆவியோடு காயம் அழிந்தாலும் மேதினியில்
பாவிஎன்று நாமம் படையாதே - மேவியசீர்
வித்தார மும்கடம்பும் வேண்டாம் மடநெஞ்சே
செத்தாரைப் போலே திரி.

ஒன்பதுவாய்த் தோல்பைக்கு ஒருநாளைப் போலவே
அன்புவைத்து நெஞ்சே அலைந்தாயே - வன்கழுக்கள்
தத்தித்தத் திச்செட்டை தட்டிக்கட் டிப்பிட்டுக்
கத்திக்குத் தித்தின்னக் கண்டு.

எத்தனைநாள் கூடி எடுத்த சரீரம்இவை
அத்தனையும் மண்தின்பது அல்லவோ - வித்தகனார்
காலைப் பிடித்துமெள்ளக் கங்குல்பகல் அற்றஇடம்
மேலைக் குடிஇருப்போமே.

எத்தனைபேர் நட்டகுழி எத்தனைபேர் தொட்டமுலை
எத்தனைபேர் பற்றி இழுத்தஇதழ் - நித்தநித்தம்
பொய்அடா பேசும் புலைமா தரைநீக்கி
உய்அடா உய்அடா உய்.

இருப்பதுபொய் போவதுமெய் என்றுஎண்ணி நெஞ்சே
ஒருத்தருக்கும் தீங்கினைஉன் னாதே - பருத்ததொந்தி
நம்மதுஎன்று நாம்இருப்ப நாய்நரிகள் பேய்கழுகு
தம்மது என்று தாம்இருக்கும் தான்.

## அன்னையாருக்கு இறுதிக்கடன் ஆற்றும் பொழுது பாடியவை

ஐயிரண்டு திங்களாய் அங்கம்எலாம் நொந்துபெற்றுப்
பையல்என்ற போதே பரிந்து எடுத்துச் - செய்யஇரு
கைப்புறத்தில் ஏந்திக் கனகமுலை தந்தாளை
எப்பிறப்பில் காண்பேன் இனி?

முந்தித் தவம்கிடந்து முந்நூறு நாள் சுமந்தே
அந்திபக லாச்சிவனை ஆதரித்துத் - தொந்தி
சரியச் சுமந்துபெற்ற தாயார் தமக்கோ
எரியத் தழல்மூட்டு வேன்.

வட்டிலிலும் தொட்டிலிலும் மார்மேலும் தோள்மேலும்
கட்டிலிலும் வைத்துஎன்னைக் காதலித்து - முட்டச்
சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டும் தாய்க்கோ
விறகிலிட்டுத் தீமூட்டு வேன்.

நொந்து சுமந்துபெற்று நோவாமல் ஏந்திமுலை
தந்து வளர்த்துஎடுத்துத் தாழாமே - அந்திபகல்
கையிலே கொண்டு என்னைக் காப்பாற்றும் தாய்தனக்கோ
மெய்யிலே தீமூட்டு வேன்.

அரிசியோ நான்இடுவேன் ஆத்தாள் தனக்கு
வரிசை இட்டுப் பார்த்து மகிழாமல் - உருசிஉள்ள
தேனே அமிர்தமே செல்வத் திரவியப்பூ
மானே எனஅழைத்த வாய்க்கு.

அள்ளி இடுவது அரிசியோ தாய்தலைமேல்
கொள்ளிதனை வைப்பேனோ கூசாமல் - மெள்ள
முகமேல் முகம்வைத்து முத்தாடி என்றன்
மகனே எனஅழைத்த வாய்க்கு.

**விருத்தம்**

முன்னை இட்டதீ முப்பு ரத்திலே
பின்னை இட்டதீ தென்இ லங்கையில்
அன்னை இட்டதீ அடிவ யிற்றிலே
யானும் இட்டதீ மூள்க மூள்கவே.

**வெண்பா**

வேகுதே தீஅதனில் வெந்துபொடி சாம்பல்
ஆகுதே பாவியேன் ஐயகோ - மாகக்
குருவி பறவாமல் கோதாட்டி என்னைக்
கருதி வளர்த்துஎடுத்த கை.

வெந்தாளோ சோணகிசி வித்தகா நின்பதத்தில்
வந்தாளோ என்னை மறந்தாளோ - சந்ததமும்
உன்னையே நோக்கி உகந்து வரம்கிடந்தென்
தன்னையே ஈன்றுஎடுத்த தாய்.

வீற்றிருந்தாள் அன்னைவீதி தனில் இருந்தாள்
நேற்றுஇருந்தாள் இன்றுவெந்து நீறுஆனாள் - பால்தெளிக்க
எல்லீரும் வாருங்கள் ஏதுஎன்று இரங்காமல்
எல்லாம் சிவமயமே யாம்.